உ

சிவமயம்

# ஆத்மபோதம்

மூலமும் - உரையும்

புதுவை - வெ. பொன்னையாமுதலியாரென்னும்

## சிவானந்தமூர்த்தி

வடமொழியினின் றுமொழிபெயர்த்து தமிழ்க்

கவிதையாகப்பாடியருளியதை

சிதம்பரம்

சண்முகசுவாமிகள்,

உரைசெய்தருளியது

குணமங்கலம்

உ - பச்சையப்பநயினர்

கேட்டுக்கொண்டபடி

புதுவை

அ - இரத்நசபாபதிமுதலியாரால்

இராம - அரங்கசாமிபிள்ளை - அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

கலியுகாதி சகஎ௲ - பிரஜோத்பத்தி ௵

இதன்விலைஅணா அ

## இந்நூலாசிரியர் சிவானந்தமூர்த்தி

## இயற்றியபிரபந்தங்கள்


விநாயகாநுபூதி ........................ *
விநாயகாலங்காரம் ........................ *
விநாயகர்திருப்புகழ்போற்றிக்கலிவெண்பா ........................ *
மயிலாசலமுருகர்மும்மணிக்கோவை ........................ *
குருஸ்தோத்திரபஞ்சகம் ........................ *
இலக்குமியந்தாதி ........................ *
சிவானந்தலகரி ........................ *
தேவிமானதபூஜை ........................ *
சிற்சத்தியஷ்டகம் ........................ *
தக்ஷிணாமூர்த்தியஷ்டகம் ........................ *
சுகாஷ்டகம் ........................ *
மோக்ஷசாதனபஞ்சகம் ........................ *
சிவோகபஞ்சகம் ........................ *
மநீஷாபஞ்சகம் ........................ *
திர்க்திரிசியவிவேகம் ........................ *
ஆத்மபோதம் ........................ *
ஸ்ரீராமமூர்த்திஜீவன்முக்தியடைந்த-
ஞானவாசிட்டச்சருக்கமிரண்டு ........................ *
ஒட்டக்கூத்தர்பாடியஈட்டியெழுபது ........................ *


இப்புத்தகங்கள் - வேண்டியவர்கள் சிதம்பரம் மேலவீதிதென்புறத்தில்-வெ. பொன்னையாமுதலியார்தர்மசத்திரத்தில் பு - அ இரத்தினசபாபதிமுதலியாரிடத்தில் கிரயத்துக்குவாங்கிக்கொள்ளலாம் அசல்தேசத்தில் வேண்டியவர்கள் தபால்மூலமாய்த்தெரிவித்தால் தபால் சிலவுதள்ளி அனுப்பப்படும்.

# சிறப்புப்பாயிரம்

## மதுராபுரி. சிவசுப்பிரமணியதேசிகர் - அருளிச்செய்தது.

### அகவல்.

பொன்னார்கமலப்-பொகுட்டுறைநான்முகன், றன்னால்வகுத்த-
தண்டிரைக்கடல்சூழ், இந்நானிலத்தி-லேற்றமிக்குடைய, தென்னார்நா
வலந்-தீவிற்கரும, பூமியிற்றோன்றிப்-பூருவமிழைத்த, காமியமில்லா
க்கருமமதனால், அந்தக்கரண-மமலமதாகி, யெந்தப்பொருளு-மிறை
யெனக்காணும், உபாசனையாமெனுஞ்-சொருமையுண்டாகிச், சுபாகர
மாகித்-திணையாய்நிற்குஞ், சாதனநான்காஞ் - சம்பத்துடைத்தாய்,
எதமுத்தாப-வெரியால்வெதும்பி, மூவேடணையை-முற்றத்துறந்து,
மாவேடகனன்-வாய்மலராத, சமபநூற்காட்டைத் - தணவுவகன்று,
எமையாளுடையா-னெழிற்சுவாசமதாம், வேதங்கிடந்த-மெய்ப்பொ
ருள்யாதென், றாதரவுடனுய்ந் - தறியாதுள்ளம், வாடுறுபவர்மேல்-
வைத்தபேரருளாற், பீடுறுநற்சிவ-பெருமான்றானே, சருவக்ஞசங்
கரா - சாரியகுருவாய்த், திருவவதாரஞ்-செய்துவாய்மலர்ந்த, ஆத்ம
போத-மருடருதக்ஷிணா, மூர்த்தியஷ்டகமே-முதிர்சுகாஷ்டகமே, சத்
தியமோக்ஷ-சாதனபஞ்சகஞ், சித்தியலார்தரு-சிவோகபஞ்சகம், பகர்
தருமநீஷா - பஞ்சகம்பரமாத், திகழ்தருதிருக்குத்-திருசியவிவேகம்
சகஜத்திராமன் - சார்ந்தமெய்ப்பதஞ்சொல், தகுவாசிட்டச் - சருக்க
மோரிரண்டும், ஆகியநூல்க-ளாரியமொழியில், வேகிகளாகிய-விற்ப
னர்க்கல்லாற், பயன்படாமையினாற் - பரமதயாளுவாய், இயல்புறு
பொருள்களை-யெளிதிற்பயக்குந், தெண்டமிழ்மொழியிற் - செய்யு
ளாய்ச்செய்துகண்டவர்யாவருங்-கைமேற்பலன்கொளத், தந்துவண
புகழுறுந்-தலைவள்ளலாயினன், செந்தமிழ்நாட்டிற்-சீர்வளர்புதுவை
மாநகர்வாழும்-வளநிறைபழுவூர், பாறுவம்மிசம் - பண்புறுவிர, புர
ந்தரகோத்திரம் - போதாயனசூத், திரந்திகழ்நற்குல - தீபமதாகிய,
முழுமணிவெள்ளை-முத்துமுதலியார், தொழுதகுதவத்திற்-றோன்றி
யபுனிதன், கல்வியுஞ்செல்வமுங்-கடவுடனருளும், நல்வினைப்பய
னுஞ்-ஞானமும்புகழும், ஆயுளுமழகு - மாரோக்கியமும், தூய்சிவ
பத்தியுஞ்-சொல்வழுவாமையும், ஈகையுமிரக்கமு - மின்மொழிகூற
லும், ஆகியநன்மை-யனைத்துமுடையோன், சித்தமாசின்றித்-தெளி
தருசிவன், முத்தபொன்னையா-முதலியாரென்னும், முதிர்சிவானந்த
மூர்த்தி - யதுர்கழல்புனைந்தவறவோன்மன்னே.

சிதம்பரம். சண்முகசுவாமிகள். - கருத்து.

அரியவே தாந்தப் பொருள்விரித் துரைத்த ......................*
அகன்றநூ லாய்ந்தவற் றவற்றில் ......................*
திருந்துறப் புகன்ற பயனெலாங் கூட்டிச் ......................*
சிந்தைசெய் பெருந்திற னிலாரும் ......................*
பொருந்திய தவத்தான் முழுட்சுவா முத்தி ......................*
புணர்ந்திடற் காத்தும போதம் ......................*
இருந்தமிழ் மொழியின் வயங்கிடத் தெளிவா ......................*
யியம்பினர் சிவானந்த மூர்த்தி......................*

குணமங்கலம் - உ, பச்சையப்பநயினர். சொல்லியது.

ஆதிசேடன் சொலற்கரிதாமிந்த - வாத்மபோதத்தை யன்பொடு பொன்னையா, நீதியாகத்தமிழி லிசைத்திய - நெறியினின் றுல கோர்பதம் பெற்றிடச், சோதியெங்குநிறைந்த சொரூபத்தைச் - சொல்லலாலிதை யானுந் துதிசெய்தேன், ஏதில்வேதியர் தாமுமிதனையே யின்பமுற் றுணர்ந் தன்புசெய் வார்களே.

குணமங்கலம் - கு, ஜெகநாதநயினர். சொல்லியது.

அறிவிற்சிறந்த பெரியோர்களா - லறிகின்ற வாத்மபோதம்மென் னுநூல், அறநெறிசொல் பொன்னையாமுதலியார் - செந்தமிழினலோதினு ரிதனையே, நெறியிலுணர்வார்பின்னும் - வேறுநூல் தேடவும் நின்றுதெளியவும்வேண்டுமோ, நிறையுமிந் நூலையொரு முறையுணர்ந்தான்முத்தி - நிலைபெற்று வாழ்வர்தாமே.

புதுவை - பாளையக்கார், வி. இராமசுவாமிமுதலியார். தமையனர்
தா. அப்பாசுவாமிமுதலியார், குமாரராகிய
இரத்நசபாபதிமுதலியார். சொல்லியது.

ஆதிகாலத்திற் சங்கரமுனிவ ஞரியமொழியினி லாத்ம - போதமென் றுரைத்த ஞானநூற்பொருளைப் புலவர்கள்பலருமோர்ந் திருந்தும், யாதினுற்றமிழிலமைத்திடப்பெறுத லாய்ந்திடில் மெய்த்தவம்புரிந்து - நீதியையோர்ந்த சிவானந்தமூர்த்தி நிகழ்த்திட நின்றது கண்டீர் ......................*

# சிறப்புப்பாயிரம்.

---

## ஷ. அ. இரத்நசபாபதிமுதலியார். சொல்லியது.

நின்றவடமொழிக்கு நேர்தென் மொழியாப்ப ..........*
இன்றியமையா - வெழிற்கலைகள் - ஒன்றன்று ..........*
மூவைந்தின்மேலா முழுமதிநேராக்கினான் ..........*
தேவ சிவானந்தமூர்த்தி ..........*

ஆத்துமபோதமென்னு - மரியவேதாந்தநூற்குச் ..........*
சாற்றருமுயர்வியாக்கியானஞ் சண்முகமுனிவரோர்ந்து ..........*
போற்றமெய்ப்பொருள்விளங்கப் பூங்கையிற்கனிபோற்றந்தார் ...*
மூத்தமாமுனிவர்தாமும் முடிமிசைக்கொள்வரன்றே ..........*

---

யாழ்ப்பாணம் - வலவைநகர், சோடசாவதானம்.
நா. ஏகாம்பரப்பிள்ளையா லியற்றப்பட்டது.

உலகமுமுலகத்-துளவின்பனைத்தும், பலவாற்றானும்-பண்புற
க்கண்டு, நிலையில்லெனநன் - னிலைகண்டுணர்ந்து, தலைமைஞானிபர்க
டாமொரீஇச்சுகிப்பர், அன்னிலைபெருமே-யலமந்துழலும், மன்னு
யிர்க்கிரங்கி-மறைபுகலாதி, தன்னையுமுலக-சாலச்சழக்கும், நன்னிலை
ஞான-நாட்டமுற்றுணர, பங்கமில்தவத்துச்-சங்கரமுனிவன், இங்குல
தேத்து-மிருங்குணசாகரன், ஆத்துமபோதமென்றுரி-யமொழியில்
சாத்துமெய்ஞ்ஞான - சாத்திரமதனை, பொற்புமிகுந்த-புதுவையம்
பதியில், அற்புடன்றோன்றிய-வருட்குணசேகரன், பவமகன்றொழி
யத்-தவமிகப்பெறலால், சிவனுளமகிழுஞ்-சிவானந்தமூர்த்தி, செந்த
மிழ்மொழியிற் - செய்யுள்புனைந்து, முந்துறசிவன் - முக்தியைச்
சார்ந்து, தாமுறுமின்பம் - தகுமுலகோர்பெற, காமுறுமன்பால்
கருதியிக்கருளினன், சுத்தமெய்ப்பொருளைத் - துகளறவிளக்கி, முத்
தியளிக்கு-முதநூலிதுவென, செவ்விதினவ்வுரை-தெளிதரவருளின
ன், திவ்வியதேசிகன் - சீர்திகழ்மேனியன், வழிபடுவோர்க்கு - வழங்
குமெய்ஞ்ஞானி, தொழுமுலகோர்க்குச் - சுகந்தருமானி, சண்முக
முனிவரன் - தகைசால், எண்ணரும்புகழ்சே-ரொங்குருபரனே.

# சிறப்புப்பாயிரம்.

சொந்தஹூர் - வரதாசாரியார், சொல்லிய - கிரந்த சுலோகங்கள்.

இர்த்பூஜாந் தேவிகாயாஃ சிவசுகலஹரீமாத்மபோதம் விவேகம்
த்ர்ஷ்டேர்த்ர்சியஸ்ய பத்யாஷ்டகம்பி மஹிதந்தக்ஷிணாமூர்த்தபேச-
அஷ்டசுலோகீம் சுகீயாமபி கிறுதமகுடே-பஞ்சகேத்வே-மனீஷீ-
தியேவஞ்சைவம்-சிவோஹந்த்விதிசபரகதே-ஸ்ஸாதனம்பஞ்சகஞ்ச.

இத்யேவம்-க்யாதஸம்க்ஞான்-நிகமமகுட தத்வார்த்த பந்தான்-
ப்ரபந்தான் க்ல்ப்த்தான் - ஸ்ரீசங்கரார்யைஃ ப்ராதிகமுனிவரா ஸ்ஸம்ஸ்
கிறுதைஸ்ஸுக்த்திரத்னைஃ-ஈர்த்தும் ஸர்வைஸ்சு போத்திபான் - த்ரமி
டபணிதி பிர்வியாதனோத்ப்ரீத சேதா-யஸ்தம் ஸ்தோதுங்க ஈஷ்டே
த்ராமிட கவிவரம்பொன்னைபாபிக்கிய - சைவம்.

புனர்த்ராமிடபாஷிபாஸ்வத இஹாதநே - தாதராத் ....... ..........*
கணேசிதாலக்கிறுதிந் - ததனுபூதிமந்தாதிதஃ ....................*
அநௌச்சிரியம-ஸௌகுருந் ததனுவர்த்தலஃ பஞ்சபிர் ..............*
மணித்ராயமகல்ப்பயன் - மஹிதமைலசைலேசிதுஃ ..................*

தசாஷ்டகமதாகரோததுலசக்த்தி சிச்சக்த்தயே ....................*
திமத்ராபகுணைகவோ மஹியவர்ணநே நாதுநா ......................*
அதோகுணவிசேஷ்த்ராமூதமிதச்சிவானந்தமூர்த்தி ..................*
யபிக்கியமகரோதமூம்-நிஜகுருர்த்தயாவானஹோ ....................*

சுத்தமுக்த்தாத்மபூரோஷி - சுவர்ணோதயவான்வாஃ
இதித்ராமிடபாஷோக்த்த - பித்ராத்மாக்கியோதிதஃ கவிஃ

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

# ஆத்மபோதம்

மூலமும்-உரையும்.

பாயிரம்.

விநாயகர் துதி.

ஆதியாம்பரமர்பெற்ற வருள்வடிவாயமுக்கட்.........*
சோதியாமாதங்கத்தின் றுணையடிக்கமலம்போற்றி....*
நீதியாமாத்மபோத நிகரில்வேதாந்தநூலை..............*
ஓதியாம்பவபாரத்தையொழித்துயர் முத்திசேர்வாம்...*

இதனதுபதப்பொருள்

ஆதியாம் - எவற்றிற்குமுதற்காரணமாகிய, பரமர் - பரமேஸ்வரர், பெற்ற - பெற்ற, அருள்வடிவாய, இருபாமூர்த்தியாகிய, முக்கட்சோதியாம் - மூன்றுகண்களையுடையவராய் தேஜோமயமாய்விளங்குகின்ற, மாதங்கத்தின்-யானைமுகத்தினையுடைய விநாயகக்கடவுளினது, துணையடிக்கமலம் - கமலமலர்போன்ற இரண்டுபாதங்களையும், போற்றி-வாழ்த்தி, நீதியாம்-உண்மையாகிய, ஆத்மபோதம்-ஆத்மபோதமென்னும்பெயரையுடைய, நிகரில்-ஒப்பற்ற, வேதாந்தநூலை வேதாந்தசாஸ்திரத்தை, ஓதி - தமிழிற்ப்ரபந்தமாகச்செய்து, யாம்-நாம், பவபாரத்தை - சனனபாரத்தை, ஒழித்து - நீக்கி, உயர் - மேலான, முத்தி - மோக்ஷத்தை, சேர்வாம் - அடைகுவாம், என்றவாறு.

இந்தப்ரபந்தத்தை வடமொழியிற்செய்தருளிய
சங்கராசாரியசுவாமிகளை ஸ்தோத்திரஞ்செய்தல்.

சுருதிமிருதிபுராணமொடு துலங்குகருணைக்காலயமாம் .. .........*
மருவுமூலகோர்நயந்தசுகம் வழங்குகின்றதபோநிதியாம்..........*

பெருகுமுலகபூச்சியராப் பிறங்குசங்காரியன்றன் ..............*
பொருவில்புகழைச்சந்ததமும் போற்றல்செய்வாமன்பாலே ....*

இதனதுபதப்பொருள்

சுருதிமிருதிபுராணமொடு - சுருதிஸ்மிருதிபுராணங்களுக்கும், துலங்கு-விளக்கமான, கருணைக்கு-கிருபைக்கும், ஆலயமாம்-இருப்பிடமாகவும், மருவுமுலகோர்-உலகத்திலுள்ளவர், நயந்த-இச்சித்த, சுகம்-நன்மையை,வழங்கும்-கொடுக்கின்றவராகவும், தபோநிதியாம் தவங்களெல்லாமொருமிக்குமிடமாகவும், பெருகும் - விருத்தியடைகின்ற, உலகபூச்சியராம்-பெரியோர்களால், சிலாக்கிக்கப்பெற்றவராகவும்விளங்காநின்ற, சங்காரியன்றன்-சங்கராசாரியசுவாமிகளுடைய, பொருவில்-ஒப்பற்ற, புகழை-கீர்த்தியை, சந்ததமும்-எப்போதும், அன்பாலே - அன்போடு, போற்றல்செய்வாம் - ஸ்தோத்திரஞ்செய்வோம். (எறு) (உ)

வேதாந்தசூத்ரஞ்செய்தருளிய வியாசபகவானையும்

அதற்குப்பாஷியஞ்செய்தருளிய சங்கராசாரியசுவாமிகளையும்

ஸ்தோத்திரஞ்செய்தல்.

வேதாந்தப்பொருளுண்மைவிரித்திடுநற்சூத்திரமுஞ்..............*
சாதாந்தற்போதநெறிதனைவிளக்கும்பாஷியமும் ... ..............*
ஓதாநின்றுலகேத்துமொப்பின்முனிவியாதனொடு... ..............*
நாதாந்தசங்கரனும் நமதாசாரியற்பணிவாம்.........................*

(இ-ள்.) வேதாந்தப்பொருளுண்மை - வேதாந்தத்தினுண்மைப்பொருளை, விரித்திடு-விசேஷிக்கும், நல்-நல்ல, சூத்திரமும்-வேதாந்தசூத்திரங்களையும், சாதாம்-மேன்மைபொருந்திய, தற்போதநெறிதனை - ஆத்மஞானமார்க்கத்தை, விளக்கும் - தோன்றச்செய்யும், பாஷியமும் - அந்தச்சூத்திரங்களின் உரையாகிய பாஷியத்தையும், ஓதாநின்று-சொல்லப்பெற்றவர்களாய், உலகேத்தும்-உலகினுள்ள மகத்துக்களாற்புகழப்பெற்ற, ஒப்பில்-ஒப்பற்ற, முனிவியாதனொடு வியாசமகாருஷியையும், நாதாந்த - சிவஸ்வரூபியாகிய, சங்கரனும்-

சங்கரனென்னுந்திருநாமத்தையுடைய, ஆசாரியன்-ஆசாரியசுவாமிகளையும், பணிவாம் - வணங்குவோம். (எ-று.) (ரு)

சங்கராசாரியசுவாமிகளையும் அவர்மாணாக்கரையும் வணங்குதல்.

தலைசால்சங்க்ராசாரியரைத்தன்மாணாக்கர் பதுமபதர்..............※
புகல்செயஸ்தாமலகர்தவம் புரியுந்தந்த்ரோடகர்மெய்யன் .........※
அகலாதுறுவார்த்திககாரரவரோடெமதுகுரவர்கடந்... ............※
தொகையைப்பரவிவினைவலையைத்துணித்துமுத்திபதஞ்சேர்வாம்※

(இ-ள்) தலைசால்-பெருமைமிகுந்த, சங்க்ராசாரியரை-சங்கராசாரியசுவாமிகளையும், தன் - அவருடைய, மாணாக்கர்-மாணாக்கர்களாகிய, பதுமபதர் - பத்மபாதரையும்; புகல்செய் - சரணடைந்த, அஸ்தாமலகர் - ஹஸ்தாமலகரையும், தவம்புரியும் - தவத்தைப்புரிகின்ற, தந்த்ரோடகர் - தந்த்ரோடகரையும், மெய்யன்பு-மெய்ப்பத்தி, அகலாதுறு - தம்மைநீங்காதிருக்கப்பெற்ற, வார்த்திககாரர்-வார்த்திககாரரையும், அவரோடு - மேற்சொல்லப்பெற்ற மாணாக்கர்களுடன், எமதுகுரவர்கடம் -இவர்களையல்லாதஎமது ஆசாரியர்களுடைய, தொகையை - கூட்டத்தை, பரவி - ஸ்தோத்திரஞ்செய்து, வினைவலையை - கர்மங்களாகிய வலையை, துணித்து - சேதித்து, முத்திபதம் - மோக்ஷத்தை, சேர்வாம் அடைகுவாம். (எ-று) (சு)

இச்சாஸ்திரம் வடமொழியினின்று
தமிழ்ப்பனுவலாகச்செய்தமைகூறியது.

உலகுயிர்பரத்திணுண்மையுரைத்தவேதாகமாதி....................※
அலகில்பல்கலைதேர்சங்கராரியனாரியத்திற்........... .............※
புலனுறப்புகன்றவாத்மபோதமஞ்ஞானநூலை......................※
இலகரனருளேணுக்கத்தாலின்றமிழ் மொழியிற்சொல்வாம் .........※

(இ-ள்) உலகுயிர்பரத்திணுண்மை - சீவேஸ்வரசகத்தின்எதார்த்தத்தை, உரைத்தவேதாகமாதி-கூறியவேதாகமமுதலிய, அலகில்பல்கலைதேர்-அளவற்றகலைக்ஞானங்களையுணர்ந்த, சங்கராரியன்-சங்கராசாரியர், ஆரியத்தில் - வடமொழியில், புலனுறப்புகன்ற - புலப்பட

த்தெளிவாகக்கூறிய, ஆத்மபோதமெஞ்ஞான நூலை - ஆத்மபோதமென்னும்மெஞ்ஞானசாஸ்திரத்தை, இலகரனருணேக்கத்தால்-விளக்கமான சிவானுக்கிரகத்தால், இன்றமிழ்மொழியிற்சொல்வாம்-இனியதமிழ்ப்பனுவலாகக்கூறுவேோம். (எ-று.) (ரு)

அவையடக்கம்

அரிதாம்பொருளமைத்தோர் நூலாக்கி ......................... ※
உரிதாமடக்கமுரைப்பார் - பெரியோர்தாம்.................... ※
முன்னூலிற்சொற்றமுதுபொருளையாரியத்திற்.................. ※
சொன்னூலைச்சொல்வேற்கென் சொல்............................ ※

(இ - ள்) அரிதாம்பொருளை - புதுமையானதோர்பொருளை; அமைத்து - எடுத்துக்கூட்டி, ஓர்நூலாக்கி-ஒருசாஸ்திரமாக்கி, உரிதாமடக்கமுரைப்பார் - உரிமையாக அவையடக்கங்கூறுவார்கள், பெரியோர்தாம்-மகான்கள், முன்னூலிற்சொற்றமுதுபொருளை - வேதத்துள்ளபழம்பொருளை, ஆரியத்திற்சொன்னூலை - வடமொழியிற்கூறிய சாஸ்திரத்தை, சொல்வேற்கென்சொல் - தமிழ்ப்பனுவலாகக்கூறிய யான்கூறவேண்டியதியாது. (எ-று.) (சா)

இந்தச்சாஸ்திரமகிமை கூறியது.

சமையிகள்கன்மவாதச் சழக்கினர் வழக்கிற்கெட்டா............... ※
உமையொருபாகனுண்மை யுணர்த்துமிச்சைவஞானம்.................. ※
அமைவரமுற்றுமோர்ந்தோரானந்தமுத்திசேர்வார்................... ※
தமவிராஜதமோகத்தோர் சங்கைதீர்ந்தெங்ஙனுய்வார்.............(எ)

பாயிரம் முற்றிற்று.





உ

திருச்சிற்றம்பலம்

# ஆத்மபோதம்

மூலமும்-உரையும்.

சாஸ்த்ராரம்பம்.



அவதாரிகை.

சர்வலோகபூஜ்யரான சங்கராசாரியசுவாமிகள் சகலவேதசாஸ்த்ரபுராணாதிகளையறிந்து சமதமாதிஆத்மகுணசம்பன்னர்களாகவிருக்கிற வுத்தமாதிகாரிகளுக்கு உபயோகமாக சூத்ரபாஷியம், உபநிஷத்பாஷியம், கீதாபாஷியம், என்கின்ற வேதாந்தபாஷியங்கள் மூன்றையுஞ்செய்து பின் இந்தபாஷியங்களையும் அவற்றைச்சேர்ந்த வியாக்யானோபன்யாசாதிகளையும்பார்த்து அவற்றின்கருத்தறிய வல்லமையில்லாதவர்களாகவும் மஹாமுமுட்சுக்களாகவுமிருக்கின்ற சுத்தாதிகாரிகளையனுக்ரகிக்கும்பொருட்டு சர்வவேதாந்தசித்தாந்த சங்க்ரஹரூபமாக - ஆத்மபோதமென் றுவடமொழியிற்கூறியசாஸ்திரத்தை-பலர்க்கும் உபகாரமாக இந்நூலாசிரியர் சிவானந்தமூர்த்தி தெளிவான அர்த்தமுள்ள தமிழ்க்கவிதையாகமொழிபெயர்த்து விளக்குகின்றார்.

கவிதை.

தபோபலமதனாற்பாபஞ்சமித்திடுதகுதியுற்றோர் ..................*
உபாதிதீர்சாந்தம்பெற்றோருரிமையாம்விராகமுற்றோர். .........*
சுபேச்சைகொண்முமுட்சுவாகுஞ்சுத்தாதிகாரிகட்கிங் ............*
கபேட்சையாமாத்மபோதமகமுறவிதித்தல்செய்வாம் . ...........*

இதனதுபதப்பொருள்.

தபோபலமதனால் - தவத்தின்வலிமையினாலே, பாபம்-பாபங்கள், சமித்திடு-நசித்த, தகுதியுற்றோர்-தகைமைபெற்றோர், உபாதி

தீர் - துன்பமில்லாத, சாந்தம்-மனத்தெளிவை, பெற்றோர்-பெற்ற வர், உரிமையாம் - தகுதியாகிய, விராகம் - ஆசையின்மையை, உற்றோர்-அடைந்தவர், சுபேச்சைகொள்-சுதந்திரர்களாகவும், முமுட்சுவாகும்-மோக்ஷ இச்சையுள்ளவராகவுமிருக்கின்ற, சுத்தாதிகாரிகட்கு-பரிசுத்ததன்மையையுடைய அதிகாரிகளுக்கு, இங்கு-இங்கே, அபேட்சையாம் - அபேக்ஷிக்கத்தக்கதான, ஆத்மபோதம் - ஆத்மபோதமென்னும்பெயருடைய-இந்த வேதாந்தசாஸ்திரத்தை, அகமுற - மனத்திற்பொருந்தும்படி, விதித்தல்செய்வாம் - சொல்லுகின்றேம். (என்றவாறு.)

தவமாவது - ப்ராஜாபத்தியம், சாந்திராயணம், முதலானகிருச்சிரங்களும் சந்தியாவந்தனம்முதலிய நித்யகன்மங்களும் க்ரஹண சங்க்ரமஸ்நானாதி நைமித்தியகன்மங்களுமாம், மோக்ஷேச்சையென்பது சம்சாரத்திற்கேதுவாகிய அஞ்ஞானமென்னு மிருதயக்ரந்தியைப் பேதித்தற்குண்டான கடியமுயற்சியாம்.

தாற்பரியம்.

இதனால்விஷயம் -பிரயோசனம்-சம்பந்தம்-அதிகாரியென்னும் - அனுபந்தசதுஷ்டயமும் சொல்லப்பட்டது-எவ்வாறென்னில் ஆத்மபோதமென்னும் இந்நூலேவிஷயம், ஆத்மசுவரூபஞானமே ப்ரயோசனம்-நூலுக்கு அறிவிக்குந்தன்மையும், சொரூபத்துக்கறியப்படுந்தன்மையுமே சம்பந்தம் - முமுட்சுக்கள் அதிகாரிகள். (க)

---

அவதாரிகை.

ஆனால் - தபோயோகமந்த்ராதிகளான - அநேகசாதனங்களிருக்க - மோக்ஷத்தைக்குறித்து, போதத்தையே பிரமாணமாகச்சொல்லுவானேனென்கின்ற சங்கைக்கு உத்தரம்.

கவிதை.

போதமொன்றல்லான்மற்றைச்சாதனம்பொருவில்வீட்டுக். ...... *
கேதுநேராகாதென்றேயியம்புவர்பாகஞ்செய்தற் ............... *

சோதருமனல்போன் மற்றையுபகரணங்கள்போதா ................*
தேதமின்ஞானமன்றியெய்திடாமுத்திப்பேறே....................*

(இ-ள்) போதமொன்றல்லால் - ஞானமொன்றேயல்லாமல், மற்றைச்சாதனம் - மற்றையவுபகரணங்கள், பொருவில் - ஒப்பற்ற, வீட்டுக்கு - மோக்ஷத்திற்கு, ஏதுநேராகாதென்று - நேரான துணைக் காரணமாகாதென்று, இயம்புவர் - மேலோர்சொல்லுவர், (அஃதெங்ஙனமென்னில்) பாகஞ்செய்தற்கு அன்னாதிகளை சமைத்தற்கு, அனல்போல் - அக்கினியைப்போல, மற்றையவுபகரணங்கள் - விறகு முதலியமற்றையசாதனங்கள், போதாது - முக்கியமாகாது, அதுபோல - ஏதமில் - களங்கமில்லாத, ஞானமன்றி - ஞானமல்லாமல், எய்திடா - சித்திக்கமாட்டாது, முத்திப்பேறு - மோட்சசித்தியானது. (எ-று.)

தாற்பரியம்

தபோயோகமந்திரமுதலான மற்றையசாதனங்களெல்லாம்பரம்பரையாயில் ஞானத்தையுண்டாக்கி மோட்சத்தைக்கொடுக்கும் ஞானமோவென்றால் - தானுண்டானவுடனே - அஞ்ஞானத்தைப்போக்கி மோட்சத்தைக்கொடுக்கும் - ஆதலால் - இந்த ஞானசாதனமானது - மற்றையசாதனங்களைக்காட்டிலும் முக்கியமானதென்றுணர்த்தியது. (உ)

---

அவதாரிகை

ஆனால் - கன்மங்கள் விசித்ரகதியுள்ளனவாகையால் ஏதாயினுமொருகன்மமே, அஞ்ஞானத்தைப்போக்கட்டும் - ஞானத்தாலாக வேண்டியதென்ன என்கிற சங்கைக்கு உத்தரம்.

கவிதை

கன்மமஞ்ஞானந்தன்னைக்கலந்தவிரோதியாகும் .....................*
மன்னியங்கதனிவர்த்திவழங்கிடவல்லதல்ல ..........................*
இன்னியஞானமொன்றேயிருணீக்குஞ்சுடரதொப்பச் ............*
சொன்னவவ்வவித்தைதன்னைத்துறந்திடுமுற்றுமன்றே ..........*

(இ-ள்) கன்மம் - யாகாதிவிசேஷகர்மமானது, அஞ்ஞானந் தன்னை - அவித்தையை, கலந்து - கலந்துகொண்டு, அவிரோதியாகும் - விரோதிக்கமாட்டாது; மன்னி - பொருந்தி, அங்கு - அவ்விடத்து, அதன் - அந்தஅவித்தையினது, நிவர்த்தி - ஒழிவை; வழங்கிடக்கொடுத்தற்கு; வல்லதல்ல - வலிமையில்லாததாகும்; இன்னிய - சுகத்தைத்தரத்தக்க, ஞானமொன்றே - ஞானமொன்றுதான்; இருணீக்கும் - இருட்டைப்போக்கும், சுடரதொப்ப - சூரியன்போல, சொன்ன - முன்சொல்லிய, அவித்தைதன்னை - அஞ்ஞானத்தை, முற்றும் - முழுதும், துறந்திடும் - போக்கும். (எ-று)

தாற்பரியம்.

ஜடமாகிய! கர்மமானது அஞ்ஞானத்துக்கபின்னமாகவிருப்பதால்-அது - அந்த அஞ்ஞானதனதயழிக்கமாட்டாது - ஸ்வப்ரகாசமான ஞானமே - இருளைப்போக்குஞ்சுடர்போல் - அஞ்ஞானத்தைப்போக்குமென்றுணர்த்தியது. (௩)

---

அவதாரிகை.

ஆத்மாவானவர் சரீரங்கடோறும் பரிச்சின்னராகவே - அனுபவிக்கப்படுகிறபடியால்-அந்தவாத்மாவுக்கு-கைவல்லியமெப்படிகூடுமென்கிற சங்கைக்கு - உத்தரம்.

கவிதை.

பரவியவான்மாமூலாஞ்ஞானத்தாற்பரிச்சின்னம்போல் ..........*
விரவுறத்தோன்றுந்தத்வவிவேகத்தவ்விகற்பம்போனற்..........*
பெருகுறுமேகநீங்கப்பிறங்குமார்த்தாண்டன்போல..........*
மருவுகேவலமாத்தன்னின் மயலறவிளங்குமன்றே..........*

(இ-ள்.) பரவிய - சர்வவியாபகமுள்ள, ஆன்மா - ப்ரீத்யகாத்மாவானவர், மூலாஞ்ஞானத்தால் - மூலப்ரகிர்தியின் விகிர்தரஜோகுணம்சமான அஞ்ஞானத்தினாலே, பரிச்சின்னம்போல் - வெவ்வேறானவர்போல, விரவுற-கலந்து, தோன்றும் - தோற்றுகின்றார், *தத்வவி

---

*தத்வவிவேகம் - பிரமஞானம்.

வேகத்து - உண்மைஞானத்தால், அவ்விகற்பம் - அந்தவஞ்ஞானம் போனால்-க்ஷயமடைந்தால், பெருகுறும் - விருத்தியடைகின்ற, மேகம் - மேகங்கள், நீங்க - விலகிச்செல்ல, பிறங்கு - அப்பொழுதுபிரகாசிக்கின்ற, மார்த்தாண்டன்போல - சூரியன்போல, மருவுகேவலமா -ஐக்யநிலையைப்பொருந்தினவராக, தன்னில் - தனக்குள், மயலற - சந்தேகமற, விளங்கும் - பிரகாசிக்கிறார். (எ-று.)

தாற்பரியம்.

பரிபூரணரா யத்விதியராயிருக்குமாத்மாவுக்கு மாயாகற்பிதமான-உத்தம அதமசரீரங்களின்-அத்யாஸத்தினாலுண்டான பரிச்சேதமானது - அவிவேகத்தாற்காணப்பட்டதேயல்லாமல் - பரமார்த்தவிசாரத்திலில்லை- ஆகையால்- தத்துவவிவேகத்தினால்-அவிவேகம்போனமாத்திரத்தில் - மேகநீங்கப்பெற்ற சூரியன்போல - ஆத்மாகேவலராகவிளங்குகிறாரென் றுணர்த்தியது (ச)

---

அவதாரிகை.

மேல் அகண்டாகாரவிருத்திஞானத்தில் ஞாதுருஞானம் ஞேயமென்கிற த்ரிபுடிரூபமான த்வைதம் சித்திக்கிறபடியால் ஆத்மாவுக்கு அத்வைதமெப்படி சித்திக்குமென்கிற சங்கைக்கு உத்தரம்.

கவிதை

அவித்தைதயிற்கலங்குசீவனப்யாஸஞானத்தாலே ..................*
நிவர்த்தனாய்த்தெளிந்துசுத்தநிர்மலனாகிப்பூர்ண..................*
விவர்த்தமாமகண்டஞானவிருத்தியுநீங்குந்தேற்று ..................*
தவிர்த்தநீர்க்கலக்கத்தோடுந்தானுடன்மாய்தல்போல..................*

(இ-ள்) அவித்தையில்-அஞ்ஞானத்தினாலே, கலங்கும்-கலங்குகின்ற,சீவன்-சிதாபாசன், அப்யாசஞானத்தால்-ஞானநிஷ்டாப்யாசத்தினால், நிவர்த்தனா-சத்வாதிகுணத்ரயங்களைவிட்டுநீங்கினவனாக, தெளிந்து-தெளிவடைந்து, சுத்தநிர்மலனாகி-மிகப்பரிசுத்தனாகி, பூர்ணவிவர்த்தமாம்-சர்வவியாபகமான, அகண்டஞானவிருத்தியும்-அகண்டாகாரவிருத்திஞானமும், நீங்கும் - நசித்துவிடும், தேற்று - தேற்றாம்விதைப்பொடியானது, தவிர்த்த-தன்னாலேநீக்கப்பெற்ற, நீர்க்

கலக்கத்தோடும் - நீரிற்கலங்கியசேற்றுடன், தான் - தானும், உடன் - உடனே, மாய்தல்போல - நீங்குதல்போல. (எ-று)

தாற்பரியம்.

அஞ்ஞானகாரியங்களான வசமாதிவாசனைகளினாலே கலங்கியிருக்கிறசீவனை ஞானமானது வெகு காலாப்யாசத்தினாலே முன்னேயஞ்ஞானத்தையழித்துவிட்டு அதன்வழியே அந்த அஞ்ஞானகாரியங்களான அந்தக்கரணாதிகளெல்லாவற்றையுமழித்துவிட்டு கலங்கினசலத்தைத்தெளிவிக்குந்தேற்றாம்வித்தைப்போல தானும் நசித்துப்போய்விடும் விருத்தியானது அஞ்ஞானகாரியமானபடியினாலும் அந்தவிருத்தியிற்ப்ரதிபிம்பித்தஞானமாத்மாபாசமானபடியினாலும் அந்தஞானமும் ஆத்மாவினிடத்திற்றானே ஐக்கியத்தையடையுமென்றுணர்த்தியது (ரு)

---

அவதாரிகை

ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கப்படுகிற சம்சாரமானது அத்யந்தம், அசத்தியமென்பது ப்ரத்யக்ஷவிரோதமாகையால் அஃதெங்ஙனங்கூடுமென்கிற சங்கைக்கு உத்தரம்.

கவிதை.

சொப்பனம்போல்வதன்றோ தொடரும்ராகத்வேஷாதி .........✻
பற்றுறுசம்சாரந்தான் பார்க்கினஞ்ஞானகால ......................✻
முற்றுஞ்சத்தியமாத்தோன்று மோகந்தீர்ப்ரபோதகாலம்.........✻
உற்றநித்திரைதெளிந்தா லொழிகனச்சகம்போற்பொய்யாம்.......✻

(இ-ள்) சொற்பனம்போல்வதன்றோ - சொப்பநமாகியவாசனைப்ரபஞ்சத்துக்கொப்பல்லவா, தொடரும் - தொடர்ந்துவருகின்ற, ராகத்வேஷாதி - ராகத்வேஷமுதலான விருத்திகளின், பற்றுறு - சம்பந்தத்தையுடைய, சம்சாரந்தான் - அசமாதிப்ரபஞ்சமானது, பார்க்கின் - விசாரிக்குமிடத்து, அஞ்ஞானகாலமுற்றும் - தனக்குக் காரணபூதமானவஞ்ஞானமிருக்குங்காலவனாயில், சத்தியமாத்தோற்றும் - எதார்த்தம்போற்றோன்றும், மோகந்தீர் - மயக்கமற்ற, ப்ரபோதகாலம் - ஞானதிசையில், உற்ற - பொருந்திய, நித்திரை - நித்

திரையானது, தெளிந்தால் - நீங்குமிடத்து, ஒழி - உடனேதானும் நீங்குகின்ற, சனுச்சகம்போல் - முன்சொன்ன வாசனாப்ரபஞ்சம் பொய்யாவதுபோல, பொய்யாம்-பொய்யாகவேபோய்விடும் எ-று.

தாற்பரியம்

இராகத்துவேஷாதிகளினாலே நிறைந்த சம்சாரமானது பொய் யாயிருந்தபோதிலும் தனக்குக் காரணமாகிய அஞ்ஞானமிருக்கு மளவில் மெய்யாகவிருந்து பின்புமகாவாக்கியார்த்த சிரவணத்தை முன்னிட்டுண்டான பிரமசாக்ஷாத்காரதிசையிலே நித்திரைதெளிந்த உடனே சொப்பனப்ரபஞ்சம் பொய்யாவதுபோல அசத்தியமாய்ப் போய்விடுமென்றுணர்த்தியது. (சு)

---

அவதாரிகை.

முன் கவியிற்சொல்லியதுபோலப் பிரபஞ்சம் பொய்யென்ப தைவேறொரு திருஷ்டாந்தத்தினாலே யுறுதிப்படுத்துகின்றார்.

கவிதை.

சுத்தியிலிரசிதம்போற்றோன்றுமிச்சகத்தின்பான்மை ........... *
நித்யசர்வாதிஷ்டானநிர்க்குணப்பிரமமெம்மட் .................. *
டுத்தியாலுணர்தற்கெட்டா தம்மட்டுமுளதாத்தோன்றுஞ் ........ *
சத்தியப்பிரமஞானந்தலைப்படின் மித்தையாமே.................... *

(இ-ள்) சுத்தியில் - கிளிஞ்சிலில், இரசிதம்போல் - ஆரோபமான வெள்ளியென்னுஞானம்போல, தோன்றும் - தோற்றமான, இச் சகத்தின் - இப்பிரபஞ்சத்தினது, பான்மை-தன்மை, நித்யம்-நித்ய வஸ்துவாகவும், சர்வாதிஷ்டானம் - அவ்யக்தாதிஸ்தூலபரியந்தமான சகல அனாத்மாக்களையும் - ஆரோபிக்குமிடமாகவும், நிர்க்குணம்- குணரகிதமாகவுமிருக்கின்ற, பிரமம் - பிரமமானது, எம்மட்டு - எது வரையில், உத்தியால் - விவேகத்தினால், உணர்தற்கெட்டாது - அறி தற்குக்கூடாதோ, அம்மட்டும் - அதுவரையில், உளதா - உள்ளதாக, தோன்றும் - தோற்றும், சத்தியம் - எதார்த்தமான, பிரமஞானம் - ஆத்மம்பாதமானது, தலைப்படின்-சித்தியானால், மித்தையாம்-பொ ய்யாகத்தோற்றும். (எ-று)

தாற்பரியம்

எப்படி சுத்திகையில் ஆரோபிக்கப்பட்ட - இரஜிதஞானமான து அதிஷ்டானமான அந்தச்சிளிஞ்சிலில் கறுத்தபின்புறம் முக்கோணம் முதலான விசேஷஞானம் வாராதவளாயில் சத்தியமாகவிருந்து அந்தவிசேஷஞானம் வந்தவுடனே அசத்தியமாகப்போய்விடுகிறதோ அப்படியே அதிஷ்டானமான பிரமஞானம் வந்தவுடன ஆரோபிதமான பிரபஞ்சஞானம் அசத்தியமாகப்போமென்றுணர்த்தியது. (எ)

---

அவதாரிகை.

மேல் - சகலசகத்துக்களும் பிரமத்தினிடத்திலே சிருஷ்டிஸ்திதிலயங்களையடைகிறதுகளென்று சொல்லுகின்றார்

கவிதை.

அகிலாதாரவதிஷ்டானவபின்னநிமித்தோபாதான.................※
தகுமூலமதாம்பரமேசன்றன்னிலுளவாஞ்சகத்தெல்லாம் .........※
அகலாநீரிற்குமிழிகள்போலனேகசிருஷ்டித்திதிலயங்கண் .........※
மிகவேயடையுமெனவெடுத்துவிளம்புஞ்சுருதியரன்முறையே. ...※

(இ-ள்) அகிலாதாரம் - சமஸ்தமான நாமரூபகற்பனைகளுக்கெல்லாம் நிலையமாயும், அதிஷ்டானம் - அதிஷ்டானபூதராகவும், அபின்னம் - அகண்டமாகவும், நிமித்தோபாதானம் - நிமித்தோபாதானபூதராகவும், தகுமூலமதாம் - தக்கவாதாரமாகவுமிருக்கின்ற, பரமேசன்றன்னில் - பரமேசுவரனிடத்தில், உளவாம் - உண்டான, சகத்தெல்லாம் - சகலஜகத்தும், அகலா-விட்டுநீங்காத, நீரிற்குமிழிகள்போல் - நீரினிடத்திற்குமிழிகள்போல, அனேகம் - அனேகமான சிருஷ்டித்திதிலயங்கள் - சிருஷ்டிஸ்திதிசம்மாரங்களை, மிக - மிகவும், அடையுமென - அடையுமென்று, எடுத்துவிளம்பும் - விசேஷித்துச்சொல்லுகின்றன, சுருதி - வேதங்கள், வரன்முறையே வருங்கிரமமாக. (எ-று)

தாற்பரியம்

நீர்க்குமிழி திருஷ்டாந்தத்தினல் - எல்லாம் - நஸ்வரமென்ற

தாயிற்று. சமஸ்தமான நாமரூபப்பிரபஞ்சங்களுக்கு அதிஷ்டானமா கவும் அகண்டமாகவும் சச்சிதானந்த அத்வயுவாகவுமிருக்கிற பிரம மானது - தானே நிமித்தோபாதன காரணகாரியமாய்நின்று சிருஷ் டிதிதிலயமுண்டாமென்று சுருதியுக்தமா யுணர்த்தியது. (அ)

---

அவதாரிகை

மேல் சகலதிரிசியப்பிரபஞ்சமும் பிரமத்தினிடத்திலே மாயை யினால் கற்பிதமென்று பிரதிபாதிக்கின்றார்.

கவிதை.

சத்தியஞ்ஞானந்தந்தகுமனுகூதமாக..........................*
நித்தியவிண்டுவாக நிறைபிரமத்திற்பொன்னில்..........................*
வித்தகக்கடகமாதி வியத்தம்போல்விவிதபேதம்..........................*
வைத்திடுசகங்களெல்லாம் வயங்குமாரோபமாக..........................*

(இ-ள்) சத்தியஞ்ஞானந்தம் - மெய்ஞ்ஞானனந்தசொரூபியாக வும், தகும் - தக்க, அனுகூதமாக - மணியுட்புகுந்தசூத்திரம்போல சர்வ சரீரங்களிலு முட்புகுந்தவராகவும், நித்தியம் - நித்தியராகவும், விண்டுவாக-சர்வவியாபகராகவும், நிறை - எங்கு நிறைந்திருக்கின்ற, பிரமத்தில் - பரமாத்மாவினிடத்தில், பொன்னில் - சுவர்ணத்தில், வித் தகம்-வியக்கத்தக்க, கடகமாதி - வளையல்முதலான, வியத்தம்போல் நாமரூபவியக்திபேதமுண்டாவதுபோல, விவிதபேதம்வைத்திடு-நா நாவிதமானபேதங்களையுடைய, சகங்களெல்லாம் - சகலசெகத்தும், ஆரோபமாக - அத்தியாசமாக, வயங்கும் - விளங்கும். (எ-று.)

தாற்பரியம்.

சத்தியஞான ஆனந்தசொரூபியாகவும் நித்தியராகவும் சர்வானு ஸ்யூதராகவும் வியாபகராகவுமிருக்கின்ற பிரமத்தினிடத்தில் அனே சம்பிரகாரமாக தேவ திரியங் நரஸ்தாவரசங்கமஸ்வரூபமான சகல நா மரூபாத்மகவியக்திகளும் சுவர்ணத்தில் கடகமகுடாதிகள் போலக் கற்பிதங்களேயல்லாமல் அணுமாத்திரமும் பிரமத்தைவிடவேறில்லை யென்றுணர்த்தியது. (கூ)

---

## அவதாரிகை.

முன் கவிதையிற்சொன்ன அர்த்தத்தை ஆகாசதிருஷ்டாந்தத்தினாலே யுறுதிப்படுத்துகின்றார்.

## கவிதை.

கடமடமுதலாநானோபாதிசேர்ககனம்போல..........................*
இடமுறுவிபுவாய்நின்றவிந்தியமுதலாமான்மா.......................*
நெடிதுறுமுபாதிபேதநீர்மையாற்பின்னமாக.........................*
வடிவுறுந்தீர்ந்தாற்பேதமாய்ந்துகேவலமாமன்றே....................*

(இ-ள்) கடமடமுதலாம் - கடம் மடம் முதலான, நானோபாதிசேர் - பலவுபாதிகளடைந்த, ககனம்போல - ஆகாசம்போல, இடமுறு - எவ்விடத்துநிறைந்த, விபுவாய்நின்ற-சர்வவியாபகராகவிருக்கின்ற, இந்தியமுதலாம் - இந்திரியப்ரவர்த்தகரான, ஆன்மா - ப்ரத்யகாத்மாவானவர், நெடிதுறும்-அதிகமான, உபாதிபேதநீர்மையால்-பலவிதலிங்கசரீரோபாதிகளையுடைந்ததன்மையால், பின்னமாக-பேதமுள்ளவர்போல, வடிவுறும் - பிரகாசிக்கிறார், தேர்ந்தால் - விசாரித்தறிந்தால், பேதமாய்ந்து - லிங்கசரீரோபாதிப்பேதங்கள் நீங்கி கேவலம் - அத்விதியராக, ஆம் - விளங்குவார். (எ-று.) அன்றே - அசை.

## தாற்பரியம்

மனம்முதலான சகலேந்திரியப்ரவர்த்தகராகவும் வியாபகராகவுமிருக்கின்ற பரமாத்மாவானவர் கடமடாபாதிகளில் ஆகாசமானது போல சுவாக்ஞானபரிகற்பிதங்களான அனேகவுபாதிகளிலே பிரதிபிம்பிதராய்க்கொண்டு அனேகர்போலத்தோன்றுகின்றார் பரமாத்மைக்யஞானத்தினால் மாயாகற்பிதமான லிங்கசரீரங்களுக்கு நாசமுண்டானவுடனே கேவலமொருத்தராகவே விளங்குகின்றாரென்றுணர்த்தியது. (௰)

---

## அவதாரிகை.

ஆனால் சர்வசரீரங்களிலேயும் அத்தந்தசாதிதருமாவஸ்தாதியபிமானியாகவிருக்கிற ஆத்மாவுக்கு நித்யமுக்தத்துவமெப்படிகூடுமென்கிற சங்கைக்கு உத்தரம்.

### கவிதை.

தோயத்தில்ரசவன்னாதிபேதம்போற்சுத்தான்மாவில்.................✻
நேயமாஞ்சாதிநாமாச்சிரமங்கணிகழுநானா.........................✻
வாயவச்சரீரோபாதிவசத்தினாரோபமாக...........................✻
மாயைகற்பித்தவாகுமதித்திடின்மித்தையாமே.......................✻

(இ-ள்) தோயத்தில்-ஜலத்தில், இரசவன்னாதிபேதம்போல்-மதுராதிரஸங்கள் சுக்லாதிவர்ணங்கள் முதலியபேதங்கள் கற்பிக்கப்பட்டதுபோல, சுத்தான்மாவில் - பரிசுத்தமான ஆத்மாவில், நேயமாம்-இச்சாரூபமான, சாதிநாமாச்சிரமங்கள் - சாதி பெயர் ஆச்சிரமம் இவைமுதலியபேதங்கள், நிகழும்-இருக்கும், நானாவாய-அனேகங்களான, அச்சரீரோபாதிவசத்தில்-அந்தஸ்தூலசூக்ஷ்மசரீரோபாதிகளின் வசத்தினால், ஆரோபமாக-அத்தியாசமாக, மாயைகற்பித்தவாகும்-மாயையினாற் கற்பிக்கப்பட்டனவாம், மதித்திடின் - விசாரிக்குமிடத்து, மித்தையாம் - பொய்யாகும். (எ-று)

### தாற்பரியம்

சுபாவத்தில் மதுரமும் சுக்லவர்னமும் உள்ள ஜலமானது கடுதிக்த நீல பீதாதித்திரவியங்களோடுசேர்ந்து தான் கடுதிக்தரஸமுள்ளதாகவும் நீலபீதரூபமுள்ளதாகவும் தோற்றுவதுபோல கேவலசுத்தரான ஆத்மாவும் முன்சொன்ன பலவிதவுபாதிகளோடுசேர்ந்து அந்தந்த சாதிநாமாச்சிரமாதிசுவரூபியாகிறானென்றுணர்த்தியது. (௧௧)

---

### அவதாரிகை.

மேலாத்மாவுக்கு அவித்தையினாலே கற்பிதமாக இருக்கிற மூன்றுபாதிகளில் முதலாவதான ஸ்தூலசரீரோபாதியைச்சொல்லுகின்றார்.

### கவிதை

பொருந்துபஞ்சீகரணமாபூதத்துதித்துத்தொடர்பாக.................✻
இருந்தகர்மசஞ்சிதமாயிலசந்தசரீரஞ்சுகதுக்கம்.....................✻
அருந்துபோகத்தானமதாயறையபடுமாலதுதானே.....................✻
திருந்துமுபாதிமூன்றின்முனஞ்செப்புந்தூலவுபாதியதே..............✻

(இ-ள்) பொருந்துபஞ்சீகரணம் - பஞ்சீகரணமாகப்பொருந்தப்பட்ட, மகாபூதத்து - பிருதிவியாதிஸ்தூலபூதங்களினின்றும், உதித்து - உண்டாய், தொடர்பாகவிருந்த - தொடர்ச்சியாகவிருந்த, கர்மசஞ்சிதமாயிசைந்த - பிராப்தகன்மத்தினாலே பிராப்தமாகப்பொருந்திய, சரீரம் - ஸ்தூலசரீரமானது, சுகதுக்கம் - அனுகூல சித்தவிருத்தியாகவும் பிரதிகூலசித்தவிருத்தியாகவுமிருக்கிற சுகதுக்கங்களை, அருந்து - புசித்தற்கிடமான, போகத்தானமதாய் - அனுபவஸ்தானமாக, அறையப்படும்-சொல்லப்படும், அதுதான் - அந்தச்சரீரமானது, திருந்து - திருந்திய, உபாதிமூன்றில் - ஸ்தூலசூக்ஷ்மகாரணசரீரோபாதிகள் மூன்றில், முன்செப்பும் - முதலாகச்சொல்லப்பட்ட, தூலவுபாதியதே - ஸ்தூலசரீரோபாதியாகும். (எ-று)

### தாற்பரியம்.

பஞ்சீகிருதமகா பூதங்களினின்றுமுண்டானதாகவும் ப்ராரப்த கர்மத்தால் ப்ராப்தமாகவுமிருக்கிற ஸ்தூலசரீரமானது போக்த்தாவான புருஷனுக்குப்போசனசாலைபோல சீவாத்மாவுக்கு சுகதுக்கானுபவஸ்தானமாயிருக்குமென்றுணர்த்தியது. (௪௨)

---

### அவதாரிகை.

மேலிரண்டாவதான சூக்ஷ்மசரீரோபாதியைச்சொல்லுகின்றார்.

### கவிதை.

போகசாதனமாய்நின்றபொருந்தியபிராணனைந்தும்..................*
தாகமார்மனமும்புந்திதசேந்திரியமிவைதாமுற்றும்..................*
யோகமார்தருமபஞ்சீகரணவுற்பத்தியான..................*
தேகமிங்கிதுதான்சூக்ஷ்மதேகமென்றிசைப்பமாதோ..................*

(இ-ள்) போகசாதனமாய்நின்ற - முன்சொன்ன சுகதுக்கபோகங்கட்குச்சாதனமாகவிருக்கின்ற, பொருந்திய - பொருத்தமான, பிராணனைந்தும் - பிராணாபானவியானோதானசமானனென்கிற மகாப்பிராணனுடைய விருத்திபேதங்களும், தாகமார்- சங்கற்பவிகற்பாத்மக அந்தக்கரணவிருத்தியான, மனமும்-மனமும் புந்தி-நிச்சயாத்மகஅந்தக்கரணவிருத்தியானபுத்தியும், தசேந்திரியம்

சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்ஙவை கிராணம் வாக்கு பாணி பாதம் பாயுரு உபத்தம் என்னும்பத்துவிதமான விந்திரியங்களும், இவை தாமுற்றும்-ஆகியவிவையெல்லாம், யோகமார்தரும்-சேர்ந்திருக்கப் பெற்ற, அபஞ்சீகரண - பஞ்சீகரணஞ்செய்யப்படாத சூக்ஷ்மபூதங்களினின்றும், உற்பத்தியான-உண்டான, தேகமிங்கிதுதான்-அபஞ்சீகரணமான தேகந்தான், சூக்மதேகமென்று-சூக்ஷ்மதேகமென்று, இசைப்ப - சொல்லப்படுவதாம். மாதோ - அசைச்சொல். (எ-று.)

## தாற்பரியம்.

பிராணன்களைந்து மனதொன்று இந்திரியங்கள் பத்து புத்தியொன்று ஆகியவிப்பதினேழு தத்துவங்களுடன் கூடி சூக்ஷ்மபூதங்களிலுண்டான சூக்ஷ்மசரீரமானது ஜீவனுக்கு சுகதுக்கபோகசாதனமாகவிருக்குமென்றுணர்த்தியது. (கரு)

---

## அவதாரிகை.

மேல் மூன்றுவது காரணசரீரோபாதியைச்சொல்லுகின்றார்.

## கவிதை.

அனாதியநிர்வாச்சியமவித்தையதுவேயாங்காரணதேகம்..........※
மனாதிசூக்கம றதாதுமருவுதூலமூலமதாம்.........................※
எனாநின்றுள்மூன்றுபாதிகட்குமெட்டாதன்யமாய்நின்ற ........※
கனாகாரத்தவான்மாவைக்கருதிவிவேகத்தாற்காண்க ... ... ..........※

(இ-ள்) அனாதி - ஆதியில்லாததாகவும், அநிர்வாச்சியம் - இன்னதென்று நிரூபிக்கக்கூடாததாகவுமிருக்கிற, அவித்தையதுவே - அஞ்ஞானரூபமே, காரணதேகம்-காரணதேகமாம், (அஃது) மனாதி-மனமுதலான தத்துவங்களுடன் கூடின, சூக்கம் - சூக்ஷமதேகம், அறுதாது - இரத்தம் - எலும்பு-சுக்கிலம்-தசை-தோல்-மூளை - இந்த ஆறுதாதுக்கள், மருவு-பொருந்திய, தூலம்-தூலசரீரம்ஆகிய விவற்றிற்கு, மூலமதாம்-மூலமாகும், எனாநின்றுள - என்றுசொல்லப்படுகின்ற, மூன்றுபாதிகட்கும்-சரீரத்ரயோபாதிகட்கும், எட்டாது-எட்டாமல், அன்யமாய்நின்ற - வேருகவிருக்கின்ற, கனாகாரத்த - எங்குநிறைந்தபரிபூரணாகாரத்தையுடைய, ஆன்மாவை-ப்ரத்யகாத்மாவை

கருதி-விரும்பி, விவேகத்தால் - விவேகத்தினால், கரண்க - நிச்சயிக்க வேண்டும். (எ-று.)

## தாற்பரியம்

(இங்கு அவித்தையை அநிர்வாச்சியமென்று கூறியதென்னெனில் பரமார்த்ததிசையில் கேவலம் துச்சமாய்ப்போகிறபடியினாலும் சத்தென்றுஞ்சொல்லக்கூடவில்லை வியவகாரதிசையில் அனேகசனனமரணங்களுக்கிடங்கொடுத்துக்கொண்டிருப்பதால் அசத்தென்றுஞ்சொல்லக்கூடவில்லை பிரகாசாந்தகாரங்கள்போல சத்தும் அசத்தும் ஒன்றுக்கொன்று விரோதமுள்ளதாகையால் சத்து அசத்தாகமாட்டாது அசத்து சத்தாகமாட்டாது ஆதலால் சத்தசத்தென்றுஞ் சொல்லக்கூடவில்லை ஆங்கோர் தன்மையுங்கூறக்கூடாமையால் அநிர்வாச்சியமென்றது) அனாதியாய் அநிர்வசயனீயமாயிருக்கிற அவித்தையேகாரணோபாதியாகும் இம்மூன்றுபாதிகட்கும்வேறாய் சாக்ஷியாயிருப்பதாத்மாவென்றுஅறியவேண்டுமென்றுணர்த்தியது (கச)

---

## அவதாரிகை.

ஆனால் அன்னமயாதிகளான பஞ்சகோசங்களிலே வியாபித்து அந்தந்த கோசாபிமானியாயிருக்கின்ற ஆத்மாவானவர் எப்படி நித்யமுத்தராகக்கூடுமென்கிற சங்கைக்கு உத்தரம்.

## கவிதை.

சுத்தமானபடிகந்தான் சூழ்ந்தநீலவன்னாதி..................*
வத்திரம்பன்மலர்முதலமருவத்தோன்றுமவைபோல ..............*
நித்தசுத்தவான்மாவுநிகழ்ந்தபஞ்சகோசத்தாற் ....................*
றத்தமயமாய்விளங்குநினுந்தானெப்போதுநின்மலமே............*

(இ-ள்) சுத்தமான-பரிசுத்தமான, படிகந்தான்-படிகமானது சூழ்ந்த-சேர்ந்த, நீலவன்னாதி-நீலநிறமுதலியபெற்ற, வத்திரம் - புடவையும், பல்-பலநிறம்பொருந்திய, மலர்முதல -மலர்முதலான திரவியங்களும், மருவ-தன்னைச்சேர்ந்தமாத்திரத்தில், அவைபோல-அந்தநீலவஸ்திரமுதலியபொருள்போல, தோன்றும் - அந்நிறமுடையதாய்த்தோன்றும் (அதுபோல) நித்தசுத்தவான்மாவும்-நித்த

ராய்க்கல்மஷமில்லாதவாத்மாவானவர், பஞ்சகோசத்தால் - அன்ன
மயமுதலான பஞ்சகோசங்களின் பொய்யான சேர்க்கையினாலே,
தத்தமயமாய் - அந்தந்தசொரூபிபோல, விளங்குகினும் - தோன்றி
னாலும், தான் - அந்தஆத்மாவானவர், எப்போதும் - எப்போதும்,
நின்மலரோ-நித்யமுத்தராகவே இருக்கின்றார். (எ-று.)

தாற்பரியம்

எப்படி சுபாவநின்மலமானபடிகமானது நீலரக்தாதித்திரவியங்
களின் சேர்க்கையினாலே தானுமந்தவன்னமாகத் தோற்றப்படுகிற
தோ அப்படிபோலச்சுத்தரான ஆத்மாவும் அன்னமயாதிகோசங்க
ளின்பொய்யான சேர்க்கையினாலே அந்தமயமாகத்தோற்றினாலும்
பரமார்த்தமாகப்பஞ்சகோசங்களுக்கு வேறாகவிருக்கிறபடியால் நித்
யமுத்தரென்பது சரியென்றுணர்த்தியது. (கரு)

---

அவதாரிகை

மேல் பஞ்சகோசங்களில் பற்றில்லாத ஆத்மாவைபிரித்து அறி
வதற்குபாயஞ்சொல்லுகின்றார்.

கவிதை

அன்னமயமாந்தூலவுடலதனுட்பிராணன்மனம்புந்தி. ..........*
யென்னுங்கோசஞ்சூக்கவுடலிலகானந்தங்காரணமாஞ். ..........*
சொன்னவிவற்றுளான்மாவுந் தொடர்பா நெல்லுட்டண்டுலம்போற்
பன்னும்யூகத்தாற்புடைத்துப்பகிர்ந்துசுத்தங்கொளல்வேண்டும். ...*

(இ-ள்) அன்னமயமாம்-அன்னமயகோசமானது, தூலவுடல்-தூல
சரீரமாம், அதனுள்-அந்தஸ்தூலசரீரத்திலிருக்கின்ற, பிராணன்-பிரா
ணனும், மனம்-மனமும், புத்தி-புந்தியும், என்னும்-என்றுசொல்லு
கிற, கோசம்-மூன்றுகோசமும், சூக்கவுடல்-சூக்ஷமதேகமாம், இலகு
விளங்குகின்ற, ஆனந்தம்-ஆனந்தமயகோசமானது, காரணமாம்-கா
ரணதேகமாகும், சொன்ன-சொல்லிய, இவற்றுள்-இப்பஞ்சகோசத்
துக்குள் ஆன்மாவும் பிரத்யகான்மாவானவர், நெல்லுள் - நெல்லினு
ள்ளே, தண்டுலம்போல்-அரிசிபோல, தொடர்பாம்-சம்பந்தப்பட்
டிருப்பர்ஆதலால், பன்னும்-எடுத்துச்சொல்லும், யூகத்தால்-விவே

கத்தினாலே, புடைத்து-இடித்து, பகிர்ந்து-வேறுபடுத்தி, சுத்தம்-சுத்ததண்டுலமெடுப்பதுபோல, கொளல்வேண்டும் - ஆத்மாவைப் பகுத்தறிந்துக்கொள்ளவேண்டும். (எ-று.)

தாற்பரியம்

உமிதவிடுகளோடுகூடியிருக்கும் அரிசியை நல்ல வுலக்கையி னாலே யிடித்துப்புடைத்துச்சுத்தமாக வேறுபடுத்தி யெடுக்கிறது போல பஞ்சகோசங்களோடுகூடியவாத்மாவை நல்லசுருதியுக்திகளி னாலே சங்கைகளெல்லாந்தீரச் சுத்தராகச்சோதித் தறியவேண்டுமெ ன்றுணர்த்தியது. (கசு)

---

அவதாரிகை.

ஆனாலாத்மா எங்குமுள்ளவரோயானால் எவ்விடத்திலுமெல்லோ ராலுமேன்காணப்படவில்லை என்கிற சங்கைக்கு உத்தரம்.

கவிதை.

நிரந்தரம்ப்ரத்யகான்மாநிகழ்பூதபௌதிகங்கள்.... ...............*
விரிந்தெங்குநிறைந்தபான்மைவிளங்கிடாப்பராமுகர்க்கே ........*
திருந்துநீராடிதம்மூட்டிகழ்தருபிரதிபிம்பம்போற் ..............*
பொருந்துறுகலக்கந்தீர்ந்தபுந்திக்கேவிளக்கமாகும்..... .........*

(இ-ள்) நிரந்தரம்-எப்போதும், ப்ரத்யகான்மா - ப்ரத்யகாத் மாவானவர், நிகழ் - பிரகாசிக்கின்ற, பூதபௌதிகங்கள்-பூதபௌதி கங்களில், விரிந்து - வியாபித்து, எங்கும்-எவ்விடத்தும், நிறைந்த பான்மை - நிறைந்திருந்தாலுமத்தன்மை, பராமுகர்க்கு - கூர்மை யில்லாதமந்தர்களுக்கு, விளங்கிடா - தோற்றமாட்டார், திருந்து-திருத்தமான, நீர்-ஜலத்திலும், ஆடிதம்முள்-கண்ணாடியிலும், திகழ் தரு-விளங்குகின்ற, பிரதிபிம்பம்போல்-பிரதிபிம்பம்போல, பொரு ந்துறு-பொருந்திய, கலக்கந்தீர்ந்த-இராகாதிகலக்கமற்ற, புந்திக்கே சுத்தபுத்தியில்மாத்திரம், விளக்கமாகும் - பிரகாசமாகத்தோற்றும். (எ-று.)

தாற்பரியம்.

ஆத்மா எங்கு நிறைந்திருந்தபோதிலும் - பிரதிபிம்பமானது

ஜலங்கலங்கினவிடத்தில்லாமல் தெளிந்தவிடத்தில் மாத்திரந்தோற்று வதுபோல சடபுத்திகளுக்கின்றி சுத்தபுத்திகளுக்குமாத்திரம் எங்கு ந்தோற்றுவதொன்றுணர்த்தியது. (கஎ)

---

அவதாரிகை.

மேல் ஆத்மாசரீரேந்திரியாதிகளோடு கூடியிருந்தபோதிலும் அதிற் சம்பந்தமில்லாதிருத்தற்கு ராஜபுருஷ திருஷ்டாந்தஞ்சொல்லுகின்றார்.

கவிதை.

தேகமிந்தியங்கள்புந்திதிகழ்மனம்பகுதியாதி..........................✲
பாகமாமிவற்றினென்றும்பகர்விலக்ஷணமாய்நின்று..................✲
சோகமாமவற்றின்விர்த்திசாக்ஷியாய்த்துலங்குகின்ற.................✲
ஏகமாம்ப்ரத்யகான்மாவிறைவன்போன்றுணரவேணடும்..........✲

(இ-ள்) தேகம்-ஸ்தூலதேகம், இந்தியங்கள்-தசேந்திரியங்கள், புந்தி-நிச்சயரூபமானபுத்தி, மனம்-சங்கற்பவிகற்பரூபமானமனம், பகுதியாதி-அஞ்ஞானரூபமாகியபிரகிருதிமுதலிய, பாகமாம்-வெவ்வேறான, இவற்றின்-இந்ததத்துவங்களைக்காட்டிலும், என்றும் - எப்போதும், பகர்-சொல்லுகின்ற, விலக்ஷணமாய் - வேறுபட்டவராக, நின்று-நிலைபெற்று, சோகமாம்-வருந்துகின்ற, அவற்றின்-அந்தசரீராதிதத்துவங்களின், விருத்தி-வியாபாரங்களுக்கு, சாக்ஷியாய்-சாக்ஷிபூதராக, துலங்குகின்ற - விளங்குகின்ற, ஏகமாம் - அத்விதியராகிய, ப்ரத்யகான்மா - ப்ரத்யகாத்மாவை, இறைவன்போன்று - அரசனையறிவதுபோல, உணரவேண்டும்-உதாசீனராகவேவிவேகியறியவேண்டும். (எ-று).

தாற்பரியம்.

எங்ஙனம் அரசன் தன் சன்னிதானத்தில் மந்திரிமுதலானகாரியஸ்தர்களால் வியாபரிக்கப்பட்ட காரியங்களில் தான் சம்பந்தப்படாமல் சாக்ஷியாகமாத்திரமிருக்கின்றானோ அவ்வாறு ஆத்மாவும் ஜடபரிணமதிரிசியங்களான தேகேந்திரியாதிகள் தனதுசன்னிதானமாத்திரத்தினால் பிரவர்த்திக்கும் வியாபாரங்களிலே தான் சம்பந்தப்படாமல் சாக்ஷியா ✲உதாசீனராகவே யிருப்ப தொன்றுணர்த்தியது. (கஅ)

✲ உதாசீனர் - விருப்பு-வெறுப்பு-இரண்டுமற்றவர்.

அவதாரிகை.

ஆனால் ஆத்மா எப்போதும் வியாபரிப்பவாாகத் தோற்றப்படு கிறபடியால் அவிகாரியென்பது எங்ஙனமென்றசங்கைக்கு உத்தரம்.

கவிதை.

உனுதறிவிலாதார்மேகமோடீல்கண்டொளிசெய்திங்கள்............✲
தனுதுசஞ்சலமென்றெண்ணுந்தன்மைபோன்மூகருக்கு... . ...✲
மனுதியிந்தியங்கடத்தமருவிடயத்திற்செல்ல........................✲
அனுதியான்மாவியாபாரத்தசைதல்போற்றோன்றுகின்றார் ......✲

(இ-ள்) உனுது-ஊனித்தறியாமல், அறிவிலாதார்-அவிவேகிகள் மேகம்-மேகங்கள், ஓடல்கண்டு-ஓடுதலைக்கண்டு, ஒளிசெய்-பிரகாசிக்கின்ற, திங்கடனுது-சந்திரனுடைய, சஞ்சலமென்று-அசையென்று எண்ணும் - விபரீதமாசநினைக்கின்ற, தன்மைபோல்-தன்மையைப் போல, மனுதி-மனமுதலான, இந்தியங்கள்-இந்திரியங்கள், தத்தம்-தங்கள்தங்களுடைய, மரு - பொருத்தமான, விடயத்தில் - விஷயங்களில், செல்ல-வியாபரிக்க, (அதனுல்) மூகருக்கு - அஞ்ஞானிகட்கு, அனுதி-அனுதியாயுள்ள, ஆன்மா-ப்ரத்யகாத்மாவானவர், வியாபாரத்து - விஷயவியாபாரத்தில், அசைதல்போல் - சலனமடைகின்றவர் போல, தோன்றுகின்றார்-தோற்றப்படுகின்றார். (எ-று.)

தாற்பரியம்

மேகங்களோடுவதைக்கண்டு சந்திரனேடுகிறதென்று பாலர்கள்சொல்லுவதுபோல இந்திரியங்கள்விஷயங்களில் வியாபரிப்பதைக்கண்டு ஆத்மாவியாபரிக்கிறுரென்று சாஸ்திரசிரவணமில்லாத அஞ்ஞானிகள்சொல்லுகிறபடியால் பரமார்த்தமாக ஆத்மாவுக்கு வியாபாரமுமில்லை விகாரமுமில்லையென்றுணர்த்தியது. (கக)

அவதாரிகை.

ஆனால் தேகேந்திரியாதிகளும் ஆத்மாவைப்போலவே சேதனங்களாகவே காணப்படுவானேனென்கிற சங்கைக்கு உத்தரம்.

கவிதை.

ஆன்மசைதன்னியத்தையடைந்ததேகேந்தியங்கள்... ..............✲
தான்மனம்புந்தியாதிசார்விடயங்கடுய்க்கும்.......................✲

மேன்மைபொருக்கன்சோதிமேவுமிச்சகங்கடத்தம்... ... ........*
பான்மைபிற்ப்ரவிர்த்திக்கின்றபண்பெனத்தேறல்வேண்டும்.....*

(இ-ள்) ஆன்மசைதன்னியத்தை - ப்ரத்யகாத்மசைதன்னியத்தை, அடைந்த-சேர்ந்த, தேகேந்தியங்கள் - தேகமும் - இந்திரியங்களும், தான்மனம்-மனந்தானும், புந்தி - புத்தியும், இன்ன - இவை, சார்தரு-தோன்றுகின்ற, விஷயம் - விஷயங்களை, துய்க்கும்-அனுபவிக்கும், (அதனை) மேன்மையார்- மேன்மைபொருந்திய, அருக்கன் சோதி- சூரியப்ரகாசத்தை, மேவும்- அடைந்த, இச்சகங்கள்- இந்த ஜகத்திலுள்ளபிராணிகள், தத்தம்பான்மையில்- தங்கள் தங்கள்காரியங்களில், ப்ரவிர்த்திக்கின்ற-ப்ரவேசிக்கின்ற, பண்பென - தன்மைபோல, தேறல்வேண்டும்- அறியவேண்டும், (எ-று.)

தாற்பரியம்

சூரியப்ரகாசத்தை ஆசிரயித்தே ஜனங்களுக்குக்காரிய ப்ரவிர்த்திவருவதுபோல ஆத்மசைதன்னியத்தை யாசிரயித்தே சரீரேந்திரியாதிகளுக்கு விஷயப்ரவிருத்தி வருகிறபடியால் ஆத்மாவே சேதனர் மற்றவையெல்லாம் அசேதனங்களே யென்றுணர்த்தியது. (உ௰)

---

அவதாரிகை

ஆனல் நான்பிறந்தேன் வளர்ந்தேன் நான்பார்க்கிறேன் கேட்கிறேன் பேசுகிறேன் நடக்கிறேன் என்று அனேக விகாரங்களை யனுபவிக்குமாத்மாவை அவிகாரியென்ப தெங்ஙனமென்கிற சங்கைக்குஉத்தரம்.

கவிதை

விவேகமில்லாதாரக்ஞானத்தினுன்மேவுதேகம்...................*
அவாவுறுமிந்தியங்களடைகுணங்கன்மமான்ம ...................*
சுவாபமென்றத்யாசிப்பர்சுத்தபூதாகாயத்தில் ....................*
திவாதநீலாதிவன்னநிகழ்வவென்றுணர்தலேபோல் .................*

(இ-ள்) விவேகமில்லாதார்- ஆத்மானாத்மவிவேகமில்லாதவர்கள், அஞ்ஞானத்தினுல், அஞ்ஞானத்தால்- மேவு- சம்பவித்த, தேகம் - சரீரம், அவாவுறும்- இச்சிக்கின்ற, இந்தியங்கள்- இந்திரியங்கள், அடை-அடைந்த, குணம்-குணங்களையும், கன்மம் - அவற்றின்கன்

மங்களையும், ஆன்மசுவாபமென்று - ப்ரத்யகாத்மதுணகர்மங்களென்று, அத்யாசிப்பர்- ஆரோபிப்பார்கள், சுத்த- நிர்மலமாகவிருக்கிற, பூதாகாயத்தில்- பஞ்சபூதத்திலொன்ருகிய ஆகாயத்தில், நிவாத ஒருவரால்பூசப்படாத, நீலாதிவன்னம்- நீலம் ரக்தம் முதலானவர்னங்கள், நிகழ்வவென்று - தோன்றுவனவென்று, உணர்தலேபோல்- அறிவதுபோல. (எ-று.)

தாற்பரியம்

நிரம்சமாகவும்- அதீந்திரியமாகவுமிருக்கிற ஆகாசத்தினுடைய சொரூபத்தைஅறியாதவர்கள், அதில்- நீலாதிவர்னங்களையாரோபிக்கிறதுபோல- நிரம்சராகவும்- அதீந்திரியராகவும் நிர்மலராகவும்- சச்சிதானந்தசொரூபியாகவும்- இருக்கிறஆத்மாவினிடத்திலே- ஆத்மசொரூபந்தெரியாத- தேகாத்மவாதிகளானமூடர்கள்- சரீராதிகுணங்களையும்- செய்கைகளையும்- ஆரோபிக்கின்ருர்கள்- ஆகையாலவைவயெல்லாம் ஆத்மதருமங்கள்ல்ல-அனாத்மாக்களான சரீராதிகளின் - றருமங்களென்றுணர்த்தியது. (உக)

---

அவதாரிகை.

ஆனல் கர்த்துருத்துவ போக்த்துருத்துவாதிகளெல்லாம் ஆத்மாவினிடத்திற்ருனே காணப்படுகிறதுகள் அதுகளைத் தள்ளக்கூடாதேயென்கிற சங்கைக்கு உத்தரம்.

கவிதை.

மானசோபாதியின்றன்மருவுகர்த்ருத்வமாதி ........................※
ஆனதன்மங்கடம்மையான்மதன்மங்களென்று ........................※
வானுறுமதியினீழல்மன்னுநீரலேதல்கண்டு .............................※
தானசைகின்றதென்னச்சாற்றல்போற்கற்பிக்கின்ருர் ..................※

(இ-ள்) மானசோபாதியின்றன்-மனமென்னு மந்தக்கரணோபாதியினுடைய, மருவு-பொருந்திய, கர்த்ருத்வமாதியான-செய்கை அனுபோகம் சுகம் துக்கம் முதலான, தன்மங்கடம்மை - தன்மங்களை, ஆன்மதன்மங்களென்று-ப்ரத்யகாத்மதருமங்களென்று, வானுறு-ஆகாயத்திற்பொருந்திய, மதியினீழல்-சந்திரபிம்பமானது, மன்னு-பொருந்திய, நீர்-ஜலத்தில், அலேதல்-ஜலத்துடன்ருனுமசைதலே,

கண்டு-பார்த்து, தான்-அந்தச்சந்திரன், அசைகின்றதென்ன-அசைகிறதென்று, சாற்றல்போல்-பாலர்முதலானவர் சொல்லுகிறதுபோல, கற்பிக்கின்றார்-ஆரோபிக்கிறார்கள். (எ-று.)

தாற்பரியம்.

ஜலத்தினுடைய சலனாதிவிகாரங்களை ஜலத்தில் பிரதிபிம்பித்த சந்திரனிடத்தில் ஆரோபிக்கிறதுபோல அந்தக்கரணத்தினுடைய கர்த்துருத்துவாதிகளை அந்தக்கரணசாக்ஷியான ஆத்மாவினிடத்திலே அவிவேகத்தினால் ஆரோபிக்கிறபடியால் அவையெல்லாமாத்ம தருமங்களல்லவென்றுணர்த்தியது. (உஉ)

---

அவதாரிகை.

செய்கை அநுபோகம் சுகம் துக்கம் இவையெல்லாம் அந்தக்கரண தருமங்களென்றும் அவற்றில் ஆத்மாவுக்கொருபோதுஞ் சம்பந்தமில்லையென்றுஞ் சொல்லியர்த்த அன்வயவியதிரேகயுக்திகளினால் எல்லோருக்குந் தெளிவாகத்தெரிந்த சரியான உதாரணத்தினால் உறுதிப்படுத்துகின்றார்

கவிதை.

அந்தக்கரண தருமங்களான ராகாதியபதின்மூன்.....................*
றுந்துமிச்சைமுதன்மூன் றுமுளவாம் புந்திவிவகரிக்கின் ..........*
நந்துசுழுத்திதனிற்புந்திநஷ்டமாம் போதவையிலையால்...........*
இந்தச்சுகதுக்காதிபுந்திக்கியன்ற தான்மாவினுக்கிலதே............*

(இ-ள்) அந்தக்கரணதருமங்களான - அந்தக்கரணவிருத்திகளான, ராகாதியபதின்மூன்று - ராகம்-துவேஷம்-காமம்-குரோதம்-லோபம்-மோகம்-மதம்-மாச்சரியம்-ஈர்ஷை-அசூயை-டம்பம்-தர்பம்-அகங்காரம்-என்னுமந்தக்கரணத்தினுடைய பதின்மூன்றுவிருத்திகளும், உந்தும்-அதிகமான, இச்சைமுதன்மூன்றும்-இச்சை-பத்தி-சிரத்தை என்னும் மூன்றுவிருத்திகளும், ஆகிய பதினாறுவிருத்திகளாலுண்டான - சுகதுக்கமுதலானவை, உளவாம் - உண்டாகும், புந்தி - அந்தக்கரணமாகிய புத்தியானது, விவகரிக்கின் - சாக்ரசொற்பனங்களிலே விவகாரத்தையடைந்தால், நந்து - மிகுந்த, சுழு

த்திதனில் - சுழுத்தியவஸ்தையில், புத்தி - முன்சொன்னபுத்தியான து, நஷ்டமாம்போது - லயமடையுமளவில், அவை - முன்சொன் னவையாவும், இலெ - இல்லை, (ஆதலால்) இந்த - இப்போதுசொல்வி ய, சுகதுக்காதி - சுகதுக்கம்முதலானவை, புந்திச்சியன்றது - புத்தி யின்றன்மையாகும், ஆத்மாவினுக்கு - ப்ரத்யகாத்மாவுக்கு, இலது- இல்லாததாகும். (எ-று.)

தாற்பரியம்

அந்தக்கரணமுண்டாயின் சுகதுக்காதிகளுண்டென்பதற்குச் சாக்ரசொற்பனங்கள் திருஷ்டாந்தம் இல்லையாயின் இல்லையென்பத ற்குச் சுழுத்தியே திருஷ்டாந்தம் ஆகையாலிந்த அன்வயவியதிரேக திருட்டாந்தங்களினால் சுகதுக்கங்கள் அந்தக்கரணதருமங்களேயல் லாமல் ஆத்மதருமங்களல்லவென்றுணர்த்தியது. (௨௩)

---

அவதாரிகை.

ஆனால் ஆத்மசொரூபந்தான் ஏதென்னிலுத்தரம்.

கவிதை.

அருக்கனிற்ப்ரகாசநீரினிற்குளிர்ச்சி யக்கினிக்குஷ்ணமுஞ்சுபாவத் *
திருக்குமாறதுபோலிலகுறுமான்மா வியல்புறுசுத்தமாங்குணங்கள்.
அருத்தமாஞ்சச்சிதானந்தநித்திய வமலபூரணமதாமங்ஙன் . . . . . . . *
திருத்தமாய்விளங்குஞ்சுருதியுத்தியினூற்றேர்ந்திமெனுபவர்தமக்கே

(இ-ள்) அருக்கனில் - சூரியனிடத்தில், ப்ரகாசம் - காந்தியும், நீரினில் - ஜலத்தில், குளிர்ச்சி - குளிர்ச்சியும், அக்கினிக்கு - அக்கினி யில், உஷ்ணமும் - வெப்பமும், சுபாவத்து - இயற்கையாக, இருக் குமாறதுபோல்-இருப்பதுபோல், இலகுறு - விளங்குகின்ற, ஆன் மா - பிரத்யகாத்மாவினுடைய, இயல்புறு - சுபாவமான, சுத்தமாம்- பரிசுத்தமான, குணங்கள் - குணங்களோவென்றால், அருத்தமாம்- பிரயோசனப்படத்தக்க, சச்சிதானந்த நித்தியவமலபூரணமதாம் - காலத்திரயத்திலும் பாதிக்கப்படாததாகவும் சிற்பிரகாசமாகவும் மிக பிரீதிக்குரியதாகவும் நித்ய நிர்மல பூரண சொரூபமாகவும் இருக்கு கையாம், அங்ஙன் -அக்குணங்கள், சுருதியுக்தியினால் - சுருதிப்பிரமா

ணங்களினாலே, தேர்ந்திடும் - ஆராய்ந்துணர்ந்த, அனுபவர்தமக்கு - சுவானுபவத்தையுடைய மெய்ஞ்ஞானிகட்கு, திருத்தமாய் - திருத்தமாக, விளங்கும் - பிரகாசிக்கும். எ-று

தாற்பரியம்

சூரியாதிகளுக்குப் பிரகாசாதிகள் சுபாவமாக விருப்பதுபோல ஆத்மாவுக்கு சச்சிதானந்தாதிகள் சுவரூபமாகின்றனவென் றுணர்த்தியது. (உ௪)

---

அவதாரிகை.

ஆனால் ஆத்மா நிர்விகாரியென்றால் அவருக்குநானறிகிறேனென்கிற பிரவிருத்திதானெங்ஙனங்கூடுமென்கிற சங்கைக்கு உத்தரம்.

கவிதை

சச்சிதான்மாவினம்சமுந்தோன்றிச் சார்புந்திவிருத்தியுங்கூடி...*
இச்சையாமவிவேகத்தினாலிரண்டு மிசைதருசிதாபாசவடிவாய்....*
நிச்சயவகம்பாவனையினான்கண்டே னெனன்முதலாகியவிருத்தி...*
துச்சமாங்கரணோபாதியேயல்லாற்சொரூபத்திற்கென் றுமஃதிலதே

(இ-ள்) சச்சிதான்மாவினம்சமும் - பிரத்யகாத்மாவினுடைய் சத்தாகிய சித்தினம்சமும், தோன்றி - தோற்றமாய், சார் - சார்கின்ற, புந்தி - அந்தக்கரணத்தினுடைய, விருத்தியும் - வியாபாரமும், கூடி - சேர்ந்துக்கொண்டு, இச்சையாம் - மயங்குகின்ற, அவிவேகத்தினால் - ஆத்ம அனாத்மாக்களைப்பிரித்தறியாத அஞ்ஞானத்தினால், இரண்டும் - அவ்விரண்டும், இசைந்திடு - பொருத்தமான, சிதாபாசவடிவாய் - ஜீவசொரூபியாகி, நிச்சய - உறுதியான, அகம்பாவனையின் - அகம்பாவத்தினால், நான்கண்டேன் - நான்பார்த்தேன், எனன்முதலாகிய - என்றுசொல்லுவதுமுதலாகிய, விருத்தி - வியாபாரமானது, துச்சமாம் - பொய்யாகிய, கரணோபாதியேயல்லால் - அந்தக்கரணவுபாதியேயல்லாமல், சொரூபத்திற்கு - ஆத்மாவுக்கு, என்றும் - எக்காலத்தும், அஃது - அந்தவிருத்திகள், இலது - இல்லாததாம். எ-று.

தாற்பரியம்

இவ்விடத்து நிரம்சரான ஆத்மாவினிடத்தில் அம்சமெப்படி

கூடுமென்னில் ஆத்மாவானவர் பரமார்த்தமாக அம்சமில்லாதவராயி ருந்தபோதிலும் பிரதீதிதிருஷ்டியாய்ப்பார்க்கும்போது அனுதியா யும் அநிர்வசனியமாயுமிருக்கிற அவித்தியாவ்சத்தினுலே நான் ஜீவ னென்று ஆத்மாவைக்காட்டிலும்!வேறுபோல ஒரு ஜீவப்பிரமையு ண்டாகிறபடியினுல் அந்த ஜீவனை அம்சம்போல விவகாரகாலத்தி லொத்துக்கொண்டு அம்சமென்றுசொன்னூர் (ஆகையால்) ஆத்மா வினுடைய பிர்திபிம்பாம்சபூதமாயிருக்கிற சிதாபாசசைதன்னியமு ம் அந்தக்கரணவிருத்தியுமிரண்டும் அஞ்ஞானத்தினுலேகூடி அகம் விருத்தியாகப்பரிணமித்துண்டான நானதிகிறேனென்கிற அகம்பா வவிருத்திஞானமானது சிதாபாசனோடுசேர்ந்த அந்தக்கரணவிருத் தியேயல்லாமல் கேவலம் சின்மயரான பிரத்யகாத்மாவினிடத்திலே ஒரு விவகாரமுமில்லையென்றுணர்த்தியது. (௨௫)

---

அவதாரிகை

மூன்கவிதையிற்சொன்ன அர்த்தத்தையே இன்னும் தெளி வாகச்சொல்லுகின்றார்.

கவிதை.

ஆன்மசிற்சொரூபம்விகாரமேயிலதா மகமுறபுந்திக்குஞானப் ..*
பான்மையெக்காலுமிலைகரணத்திற் பிர்திபிம்பஜீவன்ருன்சர்வ.....*
மேன்மைஞாதாவாயானதிகின்றேன் விளங்குறப்பார்க்கின்றேனென்
தானுறமோகவிகாரமேயல்லாற் றனித்திடிற்சாக்ஷிமாத்திரமே.*[னல்

(இ-ள்) ஆன்மசிற்சொரூபம் - சைதன்னியாம்சமானப்ரத்திய காத்மா, விவகாரமேயிலதாம் - விகாரமெவ்வளவுமில்லாததாம், அக முறபுந்திக்கு - அகங்கரிக்கின்றபுத்திக்கு, ஞானப்பான்மை - ஞான சொரூபம், எக்காலுமிலை - எப்போதுமில்லை, கரணத்தில் - அந்தக்க ரணத்தில், பிரதிபிம்ப - பிர்திபிம்பித்த, ஜீவன்ருன் - சிதாபாசன், சர்வமேன்மை - சமஸ்தமேன்மையையுமுடைய, ஞாதாவாய் - கா ண்பானுக, யானதிகின்றேன் - நானதிகிறேன், விளங்குற - பிரகாச மாக, பார்க்கின்றேன் - பார்க்கிறேன், என்னல் - என்றுசொல்லுத ல், தானுற - அந்த சிதாபாசனடைந்த, மோகவிகாரமேயல்லால் - மோகத்தாலுண்டான விகாரங்களேயல்லாமல், தனித்திடில் - தனித்த

விடத்தில், சாக்ஷிமாத்திரமே-சைதன்யாம்சமாகவேயிருக்கும். எ-று.

தாற்பரியம்.

ஆத்மாவுக்கு விகாரமில்லை புந்திக்கொருபோதுமறிவில்லை ஆனால் அகங்காரத்தோடுகூடிய சிதாபாசனென்னு மொருவனுண்டாய் காய்ந்த இரும்புக்கட்டிபோல் சொரூபசம்பந்தத்தினால் சித்துஞ்சடமுமொன்றுகூடி பேதந்தெரியாமல் அந்தக்கரணத்தினுடைய சகலசம்சார விவகாரத்தையும் தன்னதாகமேற்கொண்டு நானறிகிறேன் பார்க்கிறேனென்று மோகித்துப் பிராந்தனாயிருக்கிறானென்றுணர்த்தியது. (௨௬)

அவதாரிகை.

நிருவிகாரியான ஆத்மாவுக்கு சம்சாரப்பிரவிர்த்தி கூடாதாகையால் பிர்திபிம்பமான சீவன் சிதாபாசனென்றொருவன் உண்டென்றது. அஃதும் விவகாரதிசையிலல்லாமல் பாரமார்த்தத்திலில்லையென்று திருஷ்டாந்தத்துடன் கூறுகின்றார்.

கவிதை.

வஞ்சப்பழுதைதனிற்பாம்பு வயங்குமாரோபம்போல............*
பஞ்சகோசவிலக்ஷணமாப் பகரான்மாதான்ஜீவனென............*
அஞ்சியலக்கணுறுந்தெளிந்த வறிவாற்சீவனனல்லன்..............*
விஞ்சுபூரணான்மாவென்று விசாரித்துணர்ந்தாற்பயமறுமே......*

(இ-ள்) வஞ்சப்பழுதைதனில் - பொய்யாகியபழுதையில், பாம்பு - பாம்பென்னும்பிராந்தி, வயங்கும் - தோற்றும், ஆரோபம்போல - அத்தியாசம்போல, பஞ்சகோசவிலக்ஷணமாம் - பஞ்சகோசங்களுக்கும்வேறாக, (அவஸ்தாத்திரயசாக்ஷியாகவும் அசங்கசச்சிதானந்தசொரூபியாகவும்) பகர்-சொல்லப்படும், ஆன்மா-ஆத்மாவானவர், தான்சீவனென - தம்மை (அந்தக்கரணத்தில் பிரதிபிம்பித்து, அதனது கர்த்துருத்துவாதிதருமங்களைத் தன்னதாக மேற்கொண்ட) சிதாபாசனாக விசாரியாமலறிந்து, அஞ்சி - (ஜனனமரணாதிசம்சார) மகாபயத்தையடைந்து, அலக்கணுறும் - துன்பப்படுவர், தெளிந்த (சாஸ்திரசிரவணாதிகளாற்) றெளிந்த, அறிவால் - ஞானத்தால்



நான் (அசங்கசச்சிதானந்த சொரூபியாகிய) நான், சீவனல்லன் - (அந்தக்கரணத்தில் பிரதிபிம்பித்த) சிதாபாசனல்லன், விஞ்சும் (சாக்கிரமுதலான அந்தக்கரணவஸ்தை மூன்றிற்கும் அவற்றினபிமானிகளான விசுவ தைஜஸ பிராஞ்ஞர்களுக்கும் அதிஷ்டான பூதமாகவும் சாக்ஷிமாத்திரமாகவும்) இருக்கிற, புராணன்மாவென்று - அந்தப் பரமாத்மாவாக இருக்கிறேனென்று, விசாரித்துணர்ந்தால் - ஆராய்ந்தறிந்தால், பயமறும் - (ஜனனமரண) பயப்ராதீதிநீங்குவர். எ-று.

தாற்பரியம்

அந்தகாரத்தில் பழுதையைக்கண்ட வொருபுருஷன் இதுபாம்பென்று ப்ரமித்து பயந்தோடித் தடுக்கிவிழுந்து காயம்பட்டு துன்பமடைந்து பின்பிது பழுதைதானென்று தீரவிசாரித்தறிந்து பாம்பென்னும் பொய்யறிவுபோய் பயத்தைவிட்டும் கொஞ்சபோது காயம்பட்ட துன்பத்தைமாத்திரமுடைந்து அதுவும்போய் சுபாவமாக இருக்கிறதுபோல சச்சிதானந்தசொரூபியான ஆத்மாவும் தனதானந்த விலாசத்தினால் தனது விவர்த்தமான அஞ்ஞானரூபியாய் அதனால் தன்னிடத்திலாரோபிக்கப்பட்ட அந்தக்கரணத்தில் தனது அம்சமாக பிரதிபிம்பித்து அந்தக்கரணதருமங்களாகிய சுகதுக்காதிகளைத் தான்மேற்கொண்டிருக்கிற சிதாபாசனென்னுஞ்சீவனாகத்தன்னையறிந்து அதனால் அபரிச்சின்னராய் அத்விதீயராய் இருந்ததாம் பரிச்சின்னராய் ஸத்விதீயரானதுபோலெண்ணி அதனால் சம்சாரபயங்களையடைந்து பின்பு இதுவரையிலிந்த விலாசம் போதுமென்றுநினைத்து ஒழிவுவந்தவுடனே இந்திரஜாலம்போலக் காட்டிய தனது மதவிலாச வியாபாரங்களையெல்லாம் தனக்குள்ளடக்கிக்கொண்டு சாஸ்திரசிரவணாதிகளாலே தீரவிசாரித்து பஞ்சகோசவிலக்ஷணனாய் அவஸ்தாத்ரயசாக்ஷியாய் அசங்கசச்சிதானந்த சொரூபியாயிருக்கிற பரமாத்மாவென்று தன்னையறிந்து சம்சாரபயமெல்லாவற்றையும்விட்டும் பிராரப்தகன்மவாசனையினாலே சம்சாரசுகதுக்காதிகளைத் தேகமிருக்கிறவரையில் அனுபவித்து தேகபதனமானவுடனே தனது அகண்டாகாரசச்சிதானந்த சொரூபியாகவேயிருப்பார். ஆகையால் ஆத்மாவுக்கிந்தசம்சாரப்பிரவிருத்தி பிரதீதிமாத்திரமாக வந்தபடியால் பரமார்த்தமாக பந்தமுமில்லை மோக்ஷமுமில்லை என்றுணர்த்தியது. (உஎ)

அவதாரிகை.

மேல் ஆத்மாவானவர் சமீபத்திருக்கும் புத்தியிந்திரியாதிகளா லே காணப்படட்டுமென்று அப்பியாசதிசையிலுண்டாகிற சங்கை க்கு. அங்ஙனங்காணப்படமாட்டாரென்று திருஷ்டாந்தத்துடன் சொல்லுகின்றார்.

கவிதை.

கடாதிபல்பொருளைத்தீபங் காண்டகவிளக்குமாபோற்...........✻
கெடாதுமுக்காலுமொன்றாய் கிளர்தருபிரத்யகான்மா............✻
சடாதியாமிந்தியங்கள் சார்புந்திமுதலவெல்லாம்..................✻
விடாதுறவிளக்கிநின்றார் விளங்கிலரவற்றாற்றாமே................✻

(இ-ள்) கடாதிபல்பொருளை - கடபடமுதலான பலபொருள் களை, தீபம் - விளக்கானது, காண்டக - அறியும்படி, விளக்குமாபோல் - பிரகாசிக்கச்செய்வதுபோல, கெடாது முக்காலும் - காலத்திரயத்தும் நாசமில்லாமல், ஒன்றாய் - (தனக்குச்சகாயமின்றி) யொருவராக இருந்துக்கொண்டு, கிளர்தரு - பிரகாசிக்கின்ற, பிரத்யகான்மா- பிரத்யகாத்மாவானவர், சடாதியாம் - அறியாமைக்கிடமான, இந்தியுங்கள் - இந்திரியங்கள், சார் - சார்கின்ற, புந்திமுதலவெல்லாம்-புந்திமுதலாகியவெல்லாவற்றையும், விடாது - விடாமல், உற-மிகவும், விளக்கிநின்றார்-விளக்குவிக்கின்றார், தான் - தானென்னுஞ் (சொல்லுக்குப்பொருளாகிய கூடஸ்தாத்மாவானவர்) அவற்றால்-அந்த இந்திரியங்கள் புத்திமுதலியவற்றால், விளங்கிலர்-பிரகாசிக்கமாட்டார். எ-று.

தாற்பரியம்

எப்படி தீபமானதொன்றே கடபடாதிகளைப்பிரகாசிப்பித்துக் கொண்டு அவற்றினாலே தான்பிரகாசிக்கப்படாமலிருக்கிறதோ அப் படியே சேதனரான ஆத்மாவானவர் தாமொருவராயிருந்துகொண்டு அனேகங்களாகவும் சடங்களாகவுமிருக்கிறபுத்திமுதலான சகலஇந்திரியவிஷயங்களையும்பிரகாசிப்பிக்கிறார். அவற்றால் தாமொருபோதும் பிரகாசிப்பிக்கப்படமாட்டாரென் றுணர்த்தியது.

---

அவதாரிகை.

ஆனால் ஆத்மாவானவர் இந்த அந்தக்கரணாதிகளினாலே அறிய

ப்படாவிடில் அவனை யறியும்விஷயத்தில் இந்தப்புத்தியாதி ஞானத்தைக்காட்டிலும் வேறொரு ஞானமுண்டாகவேண்டும் அதற்குக்காரணமான வேறே அந்தக்கரணாதிகளும்வேண்டும் அவையில்லாமையால் முமுட்சுக்களுக் காத்மஞானமெப்படி யுண்டாகுமென்கிற சங்கைக்கு உத்தரம்.

கவிதை

தீபத்தைவிளக்கவேறோர் தீபம்வேண்டாமைபோல................※
தாபமில்ப்ரத்யகான்ம தற்ப்ரகாசந்தான் ஞான.....................※
ரூபமாகையினாற்றானே யொளிர்தருமன்யபோத....... .........※
சோபிதம்வேண்டா முற்றுந்துலக்குறுசோதியாமே..............※

(இ-ள்) தீபத்தை - தீபத்தை, விளக்க - பிரகாசிப்பித்தற்கு, வேறோர் - மற்றோர், தீபம் - விளக்கு, வேண்டாமைபோல - வேண்டுவதில்லாததுபோல, தாபமில் - உபாதிரகிதரான, பிரத்யகான்மதற்பிரகாசந்தான் - பிரத்யகாத்மப்பிரகாசசொரூபமானது, ஞானரூபமாகையினால் - ஞானசொரூபமாகையால், தானேயொளிர்தரும்-சுவப்ரகாசராகவே விளங்கிக்கொண்டிருப்பார், அன்யபோதசோபிதம் - தன்னையறிய வேறொரு அந்தக்கரணஞானாபேட்சை, வேண்டா-வேண்டுவதில்லை, முற்றும் - சகல இந்திரியவிஷயங்களையும், துலக்குறு - விளக்குகின்ற, சோதியாமே - சோதிதானேயாகும். எ-று.

தாற்பரியம்

வீட்டில் ஏற்றிவைத்த விளக்கானது வீட்டிலுள்ளவஸ்துக்களையெல்லாம் பிரகாசிப்பித்துக்கொண்டு தன்னையறிய வேறொரு தீபத்தைவேண்டாமல் விளக்கிக்கொண்டிருப்பதுபோல சரீரத்துக்குள்ளே இருதயாகாயத்தில் தானேவைக்கப்பட்டு அந்தக்கரணாதிகளைப் பிரகாசிப்பிக்கிற ஆத்மாவும் சடங்களான சகலேந்திரியவிஷயங்களையும் தானே பிரகாசிப்பித்துக்கொண்டு தன்னையறிய வேறொரு அந்தக்கரணஞானாபேட்சையின்றி சுவப்பிரகாசராக விளங்கிக்கொண்டிருப்பாரென்றுணர்த்தியது. (உக)

---

அவதாரிகை

ஆத்மாவானவர் புத்திமுதலான இந்திரியங்களினாலே யறியப்

படாத் தீபப்ரகாசத்தைப்போல சொரூபஞானத்தையறிய வேறொருசாதனம் வேண்டுவதில்லையெனில் - புழு - பூச்சி - பசு - மனிதன் முதலான சகலப்ராணிகளிடத்தும் சொரூபஞானமிருப்பதால் எல்லாப்பிராணிகளுக்கு மிவர்தானுத்மாவென்கிறஞானம் வரவேண்டும் மேலுந்தீபதிருஷ்டாந்தத்திலும் தீபத்தையறிய வேறொருதீபம் வேண்டாதேனும்கண்வேண்டியதால் அதுபோல் ஆத்மஞானத்திற்கும் ஒருபாயம்வேண்டுமென்கிற சங்கைக்கு அதத்வியாவிருத்திலக்ஷணத்தால் ஆத்மாவையறியவேண்டுமென்று உத்தரங்கூறுகின்றார்.

கவிதை.

நேதிநேதிவாக்கியத்தா னிகிலோபாதிதனை நீக்கி.....................*
வேதநான்கின்மாவாக்ய மேன்மையாலேசீவபர.....................*
பேதமின்றியேகமதாப் பிறங்குமைக்யமறிதக்க.....................*
தாதலாலேமெய்யுணர்வோ ரபேதமாகச்சுகிக்கின்றார்.....................*

(இ-ள்) நேதிநேதிவாக்கியத்தால்-இது ஆத்மாவல்ல இது ஆத்மாவல்ல என்றுசொல்லும்வேதவாக்கியத்தினலே, நிகிலோபாதிதனை-(ஸ்தூலசூக்ஷமகாரணசரீரங்கள் மாயை அவித்தை முதலான) சகலவுபாதிகளையும், நீக்கி-(ஆத்மாவல்லவென்று) தள்ளிவிட்டு, வேதநான்கின்-நான்குவேதங்களுடைய, மாவாக்யமேன்மையாலே - மேன்மைபொருந்திய (தத்வமசிமுதலாகிய) மகாவாக்கியங்களினலே, சீவபரபேதமின்றி-ஜீவாத்மபரமாத்மபேதமில்லாமல், ஏகமதா-அபேதமாக, பிறங்கும்-பிரகாசிக்கும், ஐக்யம்-ஐக்யமானது, அறிதக்க-(ஆத்மவிசாரஞ்செய்கின்ற சிஞ்ஞாசுவினலே) அறியத்தக்கது, ஆதலாலே அங்ஙனமியதிகளைந்துணர்ந்த, மெய்யுணர்வோர்-மெய்ஞ்ஞானிகள், அபேதமாக-பேதமில்லாமல், சுகிக்கின்றார்-மோக்ஷத்தை அனுபவிக்கின்றார். எ-று. சிஞ்ஞாசு-அறியும்விருப்பினன்

தாற்பரியம்

ஆத்மாவையறிதற்கு சொரூபலக்ஷணமென்றும் தடஸ்தலக்ஷணமென்றும் அதத்வியாவிர்த்திலக்ஷமென்றும் மூன்றுலக்ஷணங்கள் சுருதியில் சொல்லப்பட்டிருக்கின்றன அவற்றுள் சொரூபலக்ஷணமாவது சத்தியம்-ஞானம்-ஆனந்தம்-பிரமம்-என்பது. தடஸ்தலக்ஷணமாவது மண்ணிற்கடம்போல சராசரப்ரபஞ்சமெல்லாம் எங்கே

ரு.

யுண்டாய்நின்று லயிக்குமோ அது பிரமம் என்றும் சடங்களாகிய வகங்காரமுதலியவெல்லாம் எதனுடைய சைதன்னியத்தாலே சேதனங்கள்போலிருக்கிறதுகளோ அது பிரமம் என்றுஞ் சொல்லுவதுதான். அதத்வியாவிருத்திலக்ஷணமாவது ஆத்மாபின்னங்களான ஜடபதார்த்தங்களையெல்லாம் இதுவல்ல-இதுவல்ல என்று நிஷேதித்து ஆத்மாவைச்சொல்லுமிடத்து அன்னியபுருஷர் யாரையும் தன்புருஷன் இவனல்லன் இவனல்லன் என்று நிஷேதித்துத் தன்புருடனைக் காட்டுமிடத்து மௌனமாகவிருந்து குறிப்பாகக்காட்டிய குலஸ்த்ரியைப்போல சுருதிமௌனமாயிருந்துகாட்டுவது இவ்விடத்து அந்த அதத்வியாவிருத்திலக்ஷணத்தால் சரீரம் இந்திரியம் முதலான ஆரோபங்களுக்கு அதிஷ்டானமாகிய கூடஸ்தாத்மாவினிடத்தில் ஜீவனென்கிற விவகாரத்துக்கேதுக்களான வியஷ்டி தூல சூக்ஷ்ம காரண சரீரோபாதிகளையும்சர்வாதிஷ்டானமான பிரமத்தினிடத்தில் ஈசுவரனென்கிற விவகாரத்திற்கு ஏதுக்களான சமஷ்டி தூல சூக்ஷ்ம காரண சரீரோபாதிகளையும் சர்வக்ஞத்துவ கிஞ்சிக்ஞத்துவமுதலான குணபேதங்களுக்குமுதற்காரணமான மாயை அவித்தை முதலான வுபாதிகளையும் ஆத்மா அல்லவென்று தள்ளிவிட்டு தத்வமசியாதி மகாவாக்கியங்களினாலே ஜீவேசுவராதிஷ்டான சைதன்னியங்களுக்கு அபேதமறியவேண்டுமென்றார். அறியுமிடத்து அரசனுக்கும் சேவகனுக்கும் மேருவுக்கும் அணுவுக்கும் சூரியனுக்கும் மின்மினிக்கும் போல சர்வக்ஞத்துவ கிஞ்சிக்ஞத்துவாதிகுணபேதங்களினாலே வெகுபேதமிருப்பதால் தத்வமசிவாக்கியத்தின் முக்கியார்த்தத்தினால் அபேதஞ்சொல்லக்கூடாது லக்ஷணையினாலே சொல்லவேண்டும் அதாவது விட்டலட்சணை விடாதலட்சணை விட்டுவிடாதலட்சணை யென்றுமூன்றுவிதம். கங்கையிலிடைச்சேரியிருக்கிறது என்னுமிடத்து கங்கைக்குமுக்கியார்த்தமான வெள்ளத்தில் யிடைச்சேரியிருக்கமாட்டாதாகையால்கங்கையென்னுஞ்சொல்லுக்கு விட்டலட்சணையினாலே முக்கியார்த்தத்தைவிட்டுவிட்டு கங்கைக்கரையென்று கொள்ளவேண்டும் இதுதான் விட்டலட்சணையென்பது. விடாதலட்சணையாவது சிவப்போடுகிறது என்னுமிடத்து குணமாகிய சிவப்பானது குணியைவிட்டுத்தனித்துப்போகமாட்டாதாகையால் சிவப்புக்குதிரையோடுகிறதென்று முக்கியார்த்தத்தை விடாமற்கொள்ளவேண்டும் இதுதான்

விடாதலட்சணை இவ்விரண்டுலட்சணையினாலும் தத்துவமசிவாக்கியத்துக்குப்பொருள்சொல்லக்கூடாது தத்பதார்த்தமான ஈசுவரனையும் துவம் பதார்த்தமானசீவனையும் முழுதும்விடவும் முழுதுஞ்சேர்க்கவுங்கூடவில்லையாகையால் தள்ளவேண்டிய அம்சத்தைதத்தள்ளி சேர்க்கவேண்டிய அம்சத்தைச்சேர்க்கவேண்டும் அதுதான் விட்டுவிடாத லட்சணை. அஃதெப்படியென்னில் அந்ததேவதத்தனேயிவன் என்னுமிடத்து காலதேச அவஸ்தைகளுக்குப் பேதமிருப்பதால் அவற்றைத்தள்ளிசரீரபிண்டத்தையொன்றாக அறிவதுபோல தத்வமசிவாக்கியத்திலும் ஜீவேசுவரர்களுக்குகிஞ்சிஞ்ஞத்துவம்சர்வஞ்ஞத்துவம் அவித்தை மாயை முதலான வெகுபேதமுள்ள வுபாதிகளைத்தள்ளி ஜீவாதிஷ்டானமான கூடஸ்தசைதன்னியமும் ஈசுவராதிஷ்டானமானபிரமசைதன்னியமும் ஒன்றென்று விட்டுவிடாத லக்ஷணையினால் அறியவேண்டுமென் றுணர்த்தியது. (௯ம)

---

## அவதாரிகை.

அதத்வியாவிருத்தியின்றி ஆத்மசொரூபஞானம் வாராதோ. வென்னில் பாம்பல்லவென்று தள்ளாவிடில் பழுதையென்னுஞ் சத்தியஞானமெப்படிவாராதோ அப்படியே அனாத்மாக்களைத் தள்ளாவிடில் ஆத்மஞானம்வாராதாகையால் அவற்றைத்தள்ளி ஆத்மாவையறியவேண்டுமென்கின்றார்.

## கவிதை.

அவித்தைகற்பிக்குந்திரிசிய சரீரமாதியாம்பௌதிகமனைத்தும்....※
நிவப்புறுபுனலிற்குமிழிபோற்றோன்றிநின்றழிகின்றதன்மையினால்
உவப்புறுநானிங்கிவைக்கிலாமென்று முணர்வரும்விலக்ஷணனாகுந்
துவக்கறுநிமலமாகியபிரம சொரூபமென்றுணர்தரவேண்டும்....※

(இ-ள்) அவித்தைகற்பிக்கும்-அவித்தையினாலேகற்பிக்கப்பட்டிருக்கிற, திரிசியம்-திரிசியமாய்(சடமாயிருக்கிற,)சரீரமாதியாம்-சரீரமுதலான, பௌதிகமனைத்தும் - பௌதிகங்களெல்லாம், நிவப்புறு பூரணமான, புனலில் - ஜலத்தில், குமிழிபோல் - நீர்க்குமிழிபோல, தோன்றிநின்றழிகின்ற தன்மையினால் - உற்பத்தி திதிலயங்களைய

டையந்தன்மையினாலே, உவப்புறுநான் - ஆனந்தாகாசமாகவிருக்கி றநான், இங்கிவைக்கெலாம் - இப்போதெடுத்துச்சொல்லிய பௌதி கங்களுக்கெல்லாம், உணர்வரும் - அறிதற்கரிய, விலட்சணமாகும் - வேற்றுமையுடையதாகிய, துவக்கறு-பந்தமற்ற, நிமலமாகிய-நிரும லமாகிய, பிரமசொரூபமென்று-பிரமசைதன்னியமென்று, உணர் தரவேண்டும் - அறியவேண்டும். எ-று.

தாற்பரியம்

அவித்தியாகற்பிதங்களாய் திரிசியங்களாய் நீர்க்குமிழிபோலழி கின்றவைகளானசரீராதிகளை அதத்வியாவிருத்திலட்சணையினால் நிஷே தித்து அவற்றிற்குவேறாய் நிர்மலமாய் சச்சிதானந்தகனமான பிரம மாகநானிருக்கிறேனென்று ஆத்மாவையறிய வேண்டுமென்றுணர்த் தியது. (௩க)

---

அவதாரிகை.

சொல்லிப்போந்தபடி சுத்தமானபடிகமென்னுங் கவிதைமுத ல் அவித்தைகற்பிக்குமென்னுங்கவிதைவரையில் பதினேழுகவிதை களால் அத்வயானந்தசுவரூபியான ஆத்மாவை வாக்கியார்த்தஞான த்தால் அபரோக்ஷமாக அறிவிக்கும் சிரவணவிதியைச்சொல்லி அந் த அனுபவத்தையே எப்போதும் அநுபவிக்க தனக்குள்ளே மன னமுகத்தால் ஐக்யமுண்டாகும் விதியை மேல் ஐந்து கவிதைகளால் கூறுகின்றார்.

கவிதை

தேகத்துக்கன்யமாகத்திகழநானிருத்தலாலே..........................*
சோகமாம்பிறப்புமூப்புத்துவட்சியுமிறப்புமில்லேன்..........................*
ஆகமாரிந்தியங்களறியுமெற்கிலாமையாலே..........................*
தாகமாஞ்சத்தமாதிவிடயசம்பந்தமின்றே..........................*

(இ-ள்) தேகத்துக்கன்யமாக - தேகத்துக்குவேறாக, திகழநா ன்-விளக்கமாக நான், இருத்தலால் - இருக்குகையினாலே, சோகமா ம் - துன்பமாகிய, பிறப்பு - ஜனனமும், மூப்பு - வயோதிகமும், துவட்சி - தளர்ச்சியும், இறப்பு - மரணமும், இல்லேன் - இல்லாத வனாகும், ஆகமார்தேகத்திற்பொருந்திய, இந்தியங்கள் - இந்திரிய

ங்கள், அறியுமெற்கு - அறிபொருளாமெனக்கு, இலாமையாலே-இல்லாமையினல், தாகமாம் - இச்சிக்கின்ற, சத்தமாதி - சத்தமுதலான, விடயசம்பந்தம் - விடயங்களின் சம்பந்தமும், இன்று-எனக்கில்லையாம் (எ-று.)

தாற்பரியம்

நான் தேகானன்னிபனக இருக்கலால் அதன்தருமமான பிறப்புபிறப்பு முதலானவையெனக்கில்லை இந்திரியங்களில்லாதபடியால் இந்திரியவிஷயங்களோடு சம்பந்தமுமெனக்கில்லையென்றதாயிற்று. இவ்விடத்து பிறப்புமுதலானவற்றின் ஸ்வரூபமாவது-சுக்ல சுரோணித விகாரமாய் ஜராயுவென்னுங் செர்ப்பகோசத்தில் கட்டுப்பட்டு மாதாவினுதரத்தில் குடியிருந்து பிரசவகாலத்தில் தாய்வயிற்றில் வெகுஇமிசையடைந்து யோநிதுவாரத்தினலே வைணவவாயுவினல் தள்ளப்பட்டு ஜீவகலாசம்பந்தத்தோடு ஸ்தூலசரீரம் அதோமுகமாகப்பூமியில் விழ்வதேபிறப்பாகும். தலைமயிர் மூகமயிர் முதலானவையெல்லாம் நரைத்து நரம்பு நாடிகளெல்லாந்தளர்ந்து பல்விழ்ந்து கண்தெரியாமல் காதுகேளாமல் கோழையுமிருமலும் கோபமுந்தாபமும் மேலிட்டு வேறுபட்டகுணத்தோடு ஸ்தூலசரீரமானது கோல்பிடித்து நடந்துவருவதே மூப்பாகும். வியாதியினலும் வியசனத்தினலும் சரீரம்வாடிப்போவதே இளைப்பாகும். இறக்குங்காலத்திற் பிராணவாயுவினல் விடுபட்டு பிரேதமாய் தகனம் கனனம் ஜந்துபக்ஷணம் முதலியவற்ருல் சரீரமழிவதே யிறப்பாகும் (இங்கே தகனம் கொளுத்துதல் - கனனம் புதைத்தல் - ஜந்துபக்ஷணம் நாய்நரி முதலிய ஜெந்துக்கள்பக்ஷித்தல்) இந்ததுன்பமெல்லாம் சரீரத்திற்கேயல்லாமல் ஆத்மாவுக்கில்லையென்றுணர்த்தியது. (௩௨)

---

அவதாரிகை.

அந்தக்கரண வியாபாரசம்பந்தமும் ஆத்மாவுக்கில்லையென்று சொல்லுகின்ருர்.

கவிதை.

மனமெனக்கிலாமையாலே வளர்தரும்ராகத்துவேஷங்.............*
கனபயந்துக்கமாதி கலக்கங்களொன்றுமில்லை.........................*

எனவகையென்னிலான்மா வியன்மனம்பிராணனில்லா.............*
தெனமறைசுப்ரமென்றே யிசைத்திடுமாதலாலே.......................*

(இ-ள்) மனமெனக்கிலாமையாலே - எனக்குமனமில்லாமையால், வளர்தரும் - விருத்தியடைகின்ற, ராகத்துவேஷங்களபயந்துக்கமாதி - இச்சை பகை மிக்கபயம் துக்கம் முதலான, கலக்கங்கள் - சலனங்கள், ஒன்றுமில்லை - ஒன்றுமில்லை, எனவகையென்னில்- அஃதெப்படியென்னில், ஆன்மா - ஆத்மாவானவர், இயன்மனம் - சலிக்கின்றமனமும், பிராணன் - பிராணனும், இல்லாது - இல்லாதவர், என - என்று, மறை - வேதமானது, சுப்ரமென்று - நிருமலமென்றும், இசைத்திடும் - எடுத்துரைக்கும், ஆதலாலே - ஆனதால். எ-று.

தாற்பரியம்

ஆத்மாவுக்குப் பிராணன்மனது ஒன்றுமில்லை நித்யநிர்மலராயிருக்கிறுரென்று வேதத்திற்சொல்லியபடி யெனக்குமனமில்லாதபடியால் அதன் விகாரமான துக்கம்முதலானவையும் இல்லையென்றுணர்த்தியது. (௫௫)

---

அவதாரிகை.

இந்தப்படி யிரண்டுகவிகளாலும் அநாத்ம நிஷேதானுபவத்தைச்சொல்லி அதன்முடிவான சுவானுபவத்தை மேல்மூன்று கவிகளாலே சொல்லுகின்றுர்.

கவிதை

சருவசாக்ஷியாகுநான்சான்ற சுத்தநிர்க்குணத்தன்.................*
ஒருவிநின்றேன்கிரியையெலா மொருவாநித்தனிருவிகற்பன்.....*
பொருவிலாதநிரஞ்சனனும் புகலும்விகாரரகிதனுமே.............*
உருவினிராகாரன்முத்த னெப்பினிமலனுய்நின்றேன்...............*

(இ-ள்) சருவசாக்ஷியாகுநான் - (அகங்காரமுதலிய பிரபஞ்சங்கட்கெல்லாஞ்) சாக்ஷியாயிருக்கின்றநான், சான்ற சுத்தநிர்க்குணத்தன் - மேலானபரிசுத்தம்பொருந்திய நிர்க்குணத்தன், (சத்துவாதிகுணங்களொன்றுமில்லாதவனுகவும்) ஒருவிநின்றேன்கிரியையெலாம் - இந்திரிய வியாபாரங்களையெல்லாம் நீங்கி யிருப்பவனுகவும்,

ஒருவா (எப்பொருளையும்) விட்டுப்பிரியாத, நித்தன் - அழிவில்லாதவனாகவும், நிருவிகற்பன் - விகற்பமில்லாதவனாகவும், பொருவிலாத - ஒப்பிடக்கூடாத, நிரஞ்சனனும் - பாபமில்லாதவனாகவும், புகலும் - சொல்லுகின்ற, விகாரரகிதனும் - நிர்விகாரனும், உருவில் - உருவமில்லாத, நிராகாரன் - நிராகாரனாகவும், முத்தன் - நித்யமுத்தனாகவும், ஒப்பில் - ஒப்பற்ற, நிமலனாய் - நிர்மலசுவரூபியாகவும், நின்றேன் - இருக்கின்றேன். எ-று.

தாற்பரியம்.

குணங்கள் புத்தியின் வாசனைகளாகையால் புத்தி சம்பந்தமில்லாத வெனக்கு குணங்களுமில்லை. இந்திரியசம்பந்தமில்லாதபடியால் அவற்றின் வியாபாரங்களாகிய செய்கைகளுமில்லை. அவயவநாசமேயழிவாகையால் அவயவங்களில்லாத வெனக்கழிவுமில்லை. உற்பத்தியாய்க்ஷயமடைவதே விகற்பமாகையால் அவையில்லாதவெனக்கு விகற்பமுமில்லை. மனோவியாபாரமே அஞ்சனமாதலால் மனதில்லாத வெனக்கஞ்சனமாகிய பாபமுமில்லை. சங்கமுள்ளவஸ்துக்களுக்கே விகாரமுண்டாகிறபடியால் சங்கமில்லாதவெனக்கு விகாரமுமில்லை. பதினேழிந்திரிய சுவரூபமான லிங்கசரீரமே யாகாரமாதலால்லிங்கசரீரமில்லாதவெனக்கு ஆகாரமுமில்லை. பந்தமோக்ஷங்கள் அவித்தை வித்தை இவற்றின் காரியங்களாகையால் அவற்றின் சம்பந்தமில்லாதவெனக்கு அவற்றின்காரியங்களான பந்தமோக்ஷங்களுமில்லை. ஆதலால் எப்போதும் முக்தன். ஒன்றோடொன்று சேர்ந்தவஸ்துக்களுக்கே ஒன்றுக்கொன்றுரஞ்சுதலால் மலமுண்டாகிறபடியால் ஒன்றிலுஞ் சம்பந்தமில்லாத வெனக்கு மலமேயில்லை. என்றிந்தப்படி நிர்க்குணசுவரூபனாக இருக்கிறேனென்று அறிவதே சுவானுபவமாகுமென்றுணர்த்தியது. (௫௪)

---

அவதாரிகை.

சொல்லிப்போந்த பிரமாணங்களினாலே அறியப்பட்ட சுவானுபவத்தை திருஷ்டாந்தத்தினாலே யுறுதிப்படுத்துகின்றார்.

கவிதை.

ஆகாயம்போல்யான் சகலத்தகமும்புறமும்பூரணனாய் ..........*

ஏகாதாரவச்சுதனுயிலங்குசர்வசமனுக .......................*
வாகார்சுத்தநிற்சங்கவயங்குநிமலநிற்சலன .......................*
ஊகாகாரவுணருருவாயுள்ளேன் மூக்காலத்தினுமே.......................*

(இ-ள்) ஆகாயம்போல் - ஆகாயமானதுபோல, சகலத்தகமும் புறமும் - சமஸ்தவஸ்துக்களுடைய உள்ளிலும் வெளியிலும், பூரணனுய் - நிறைந்தவனுகவும், ஏகாதாரவச்சுதனுய் - உலகத்துக்கு முக்கியாதாரமாகவும் அழிவற்றவனுகவும், இலங்கு - விளங்குகின்ற, சர்வசமனுக-எங்கும்சமானனுகவும், வாகார்-அழகுபொருந்திய, சுத்த-பரிசுத்தனுகவும், நிற்சங்க - சங்கமில்லாதவனுகவும், வயங்கும் - விளங்குகின்ற, நிமல - நிர்மலனுகவும், நிற்சலன - சலனமில்லாதவனுகவும், ஊகாகார - தியானத்துக்குத்தக்க ஆகாரத்தையுடையவனுகவும், உணருருவாய்-ஞானசுவரூபியாகவும், உள்ளேன் -இருக்கிறேன், மூக்காலத்தினும்-காலத்ரயத்திலும். (எ-று)

தாற்பரியம்

எப்படியாகாயமானது கடம்-மடம் முதலான அநேகவுபாதிகளில் நிறைந்து வியாபித்துக்கொண்டு அவையழியினும் தானழிதலின்றிசுத்தமாய்ப்பற்றின்றிநிர்மலமாயசைவற்றிருக்கிறதோ அப்படியேஅகமென்னுஞ்சொல்லுக்குப்பொருளானநானும் அகங்காரமுதலான பிரபஞ்சங்களினுள்ளும் புறம்பும் நிறைந்து வியாபித்துக்கொண்டுஅவையழியினு மழியாமல் எங்குஞ்சரியாய்ப்பரிசுத்தனுய்ப்பற்றின்றி நிர்மலனுயசைவற்றெப்போதும் விளங்கிக்கொண்டிருக்கிறேனென்றுணர்த்தியது. (௩௫)

---

அவதாரிகை

முன்கவியிற்சொன்ன திடமான அபரோக்ஷானுபவத்தைத்தெளிவாகக்காண்பிக்கின்றுர்.

கவிதை.

நித்தியசுத்தபோதநிகரிலத்வயமனந்தஞ்.......................*
சத்தியமகண்டானந்ததற்பரம்பொருள்யாதந்த .. .......................*
உத்தமசொரூபம்யானேயுலகெனுங்காட்சியெல்லாம்.......................*
முத்தமாமென்னுட்டோன்று முகுரத்திற்சாயைபோல்.......................*

(இ-ள்) நித்தியசுத்தபோதம் - நித்தியமாகவும்-நிர்மலமாகவும்-போதவடிவாகவும், நிகரில் - ஒப்பற்ற, அத்வயம் - இரண்டாவதில்லாததாகவும், அனந்தம் - அனந்தமாகவும் (சுருதியிற்சொல்லப்பட்ட) சத்தியம்-சத்தியமாகவும், அகண்டானந்தம்-அபரிச்சின்னமான ஆனந்த சுவரூபமாகவும், தற்பரம் - தெய்வீகமாகவு மிருக்கின்ற, பொருள் - பொருளானது, யாது - எதுவோ, அந்த - அந்த, உத்தமசொரூபம் - உத்தமப்பொருள், யானே - நாமேயாகும், உலகெனும் - உலகென்றுசொல்லுகின்ற, காக்ஷியெல்லாம் - பிரபஞ்சமெல்லாம், மூத்தமாம் - முக்ததசையை யடைந்த, என்னுள் - என்னிடத்தில், தோன்றும் - விளங்காநிற்கும், முகுரத்திற் - கண்ணாடியிற்றோன்றுகின்ற, சாயைபோல - பிரதிபிம்பம்போல. எ-று.

தாற்பரியம்

காலதிரயத்திலும் அழிவில்லாமலும் ஒன்றிலுமொட்டாமலும் பிரபோதவடிவாகவும் ஏகரசமாகவும் இரண்டற்றதாகவும் அகண்டமான ஆனந்தசொரூபமாகவும் சத்தியம் ஞானம் ஆனந்தம் பிரமம் என்று சுருதியிற் சொல்லப்பட்டதாகவும் இருக்கிற பிரமமேநானென்றறியவேண்டுமென்றுணர்த்தியது. (சகூ)

---

அவதாரிகை.

முன்சொன்னபடி எப்போதும் மனனஞ்செய்தால் அதுவே மேலான புருஷார்த்தத்தைக் கொடுக்குமென்கின்றார்.

கவிதை.

நிரந்தரம்பிரமமே யானென்றிடுமப்பியாசம்......................※
புரிந்திடிலவித்தியாவி க்ஷேபங்களைப்போக்குமிங்ஙன்..............※
வருந்துறுபிணியைநாளாதியிற்சேர்ந்துமாற்றுகின்ற..............※
திருந்தியவௌடதம்போற் றிகழ்சாட்சாத்காரமுண்டாம்.........※

(இ-ள்) நிரந்தரம் - எப்போதும், பிரமமேயான் - நான் பிரமமாகவேயிருக்கிறேன், என்றிடும் - என்றுசொல்லுகிற, அப்பியாசம் - அப்பியாசமானது, புரிந்திடில் - செய்தால், அவித்தியாவிக்ஷேபங்களை - அவித்தியாவிக்ஷேபங்களாகிய (சம்சாரதுக்கங்களை) போக்

கும் - ஒழித்துவிடும், இங்ஙன் - இவ்வுலகத்தில், வருந்துறு - வருந்தத்தக்க, பிணியை - வியாதியை, நாளாதியில் - நாளுக்குநாள், சேர்ந்து - சேர்ந்து, மாற்றுகின்ற - அப்பிணியைநீக்குகின்ற, திருந்திய - திருத்தமான, ஔடதம்போல் - மருந்துபோல, திகழ் - விளங்குகின்ற, சாக்ஷாத்காரம் - பிரமஞானம், உண்டாம் - உண்டாகும். எ-று.

தாற்பரியம்

ஔடதமானது நெடுநாட்பழக்கத்தினாலே யெப்படி ரோகங்களைப்போக்கடிக்குமோ அப்படியே நானே பிரமமென்று நெடுநாளிடைவிடாமற்செய்யும் அப்பியாசமானது அந்தக்கரணகாரியங்களான சகலசம்சாரதுக்கங்களையும் போக்குமென்றுணர்த்தியது. (௩எ)

---

அவதாரிகை

பிரமானுசந்தானத்தில் சாதனமான நியமத்தைச்சொல்லுகின்றார்.

கவிதை.

ஏகாந்தத்தலத்திருந்தே யிதயத்தில்விராகங்கொண்டு..............✻
தேசாதிவாசம்விட்டுச் செறிந்தவிந்தியங்கள்வென்று..............✻
வாகார்புந்தியைப்புறத்தே மருவுறாதேகவான்ம.................✻
ஆகாரத்திருத்தியன்னிய மாகாதுதியானஞ்செய்க...................✻

(இ-ள்) ஏகாந்தத்தலத்து - ஏகாந்தஸ்தானத்தில், இருந்து - வசித்து, இதயத்தில் - மனத்தில், விராகங்கொண்டு - ஆசையில்லாமையைக்கொண்டு, தேசாதிவாசம்விட்டு - தேசமுதலிய (பிரபஞ்ச) வாசனையைவிட்டு, செறிந்தவிந்தியங்கள் - இந்திரியக்கூட்டங்களை, வென்று - ஜெயித்து, வாகார் - ஊக்குந்தன்மையையுடைய, புந்தியை - புத்தியை, புறத்தே - விஷயங்களில், மருவுறாது - செல்லவொட்டாது, ஏக - முக்கியமான, ஆன்மவாகாரத்து - ஆத்மசொரூபத்தில், இருத்தி - நிறுத்தி, அன்னியமாகாது - அன்னியபாவனையின்றி, தியானஞ்செய்க - தியானஞ்செய்யவேண்டும். எ-று.

தாற்பரியம்

மோக்ஷத்தில் தீவரமானவிருப்புள்ளவன் ஜனபாதையில்லாதவிடத்தில் மிருதுவான கம்பளாதியாசனத்தி லுட்கார்ந்துக்கொண்டு

இகபரசுகேச்சைகளைவிட்டு இந்திரியங்களையடக்கிக்கொண்டு வேறு அநாத்ம விஷயங்களிலே புத்தியைவைக்காமல் நித்ய சுத்த புத்த பரிபூரணானந்த சுவரூபியான ஆத்மா நானேயென்று வேறறப்பாவனை செய்யக்கடவனென்றுணர்த்தியது. (௩௮)

---

அவதாரிகை.

திரிசியமான பிரபஞ்சத்துக்குக் காரணமாகிய சாக்ரத்தில் ஏகமாசத்தியானிக்கும்பாவனை யெப்படிகூடுமென்னில் உத்தரங்கூறுகின்றார்.

கவிதை.

ஆன்மமெய்ப்பொருளினாநா வகிலமாங்காட்சிதன்னை...... .......*
மேன்மைசால்புந்தியுள்ளோன் விவேகத்தாலயிக்கஞ்செய்து......*
தானெனுமேகான்மாவை தனித்தொளிர்நிமலமான...............*
வானெனப்பாவித்தென்று மருவுகபரமாநந்தம்.......... ........*

(இ-ள்) ஆன்மமெய்ப்பொருளில் - சத்தியவஸ்துவாகிய ஆன்மாவினிடத்தில், நாநா - நாநாரூபமான, அகிலமாம் - பிரபஞ்சமாகிய, காட்சிதன்னை - திரிசியங்களை, மேன்மைசால் - மேலான, புந்தியுள்ளோன் - புத்திமான், விவேகத்தால் - விவேகத்தினால், அயிக்கஞ்செய்து - லயஞ்செய்து, தானெனும் - தன்னைக்காட்டிலும்வேறல்லாத, ஏகான்மாவை - அத்துவிதியரானபரமாத்மாவை, தனித்து - நாசமின்றி, ஒளிர் - பிரகாசிக்கின்ற, நிமலமான - நிர்மலமான, வானென - ஆகாயம்போல, பாவித்து - தியானித்து, என்றும் - எப்போதும்; மருவுக - அடையக்கடவன், பரமானந்தம் - மேலான பிரமானந்தத்தை. எ-று.

தாற்பரியம்.

பிரமசொரூபஞானத்தில் புத்தியுள்ள அப்பியாசியானவன் ஆத்மாவினிடத்தில் கற்பிதமான சகலபிரபஞ்சத்தையும் அதிஷ்டானமான அதனிடத்திலேயே நல்லயுத்தியினாலே லயிக்கச்செய்து ஏகமான ஆத்மசொரூபத்தை பூரணசந்திரோதயத்தினால் நிர்மலமாக விளங்கும் ஆகாயத்தைப்போல எப்போதும் பாவனைசெய்யவேண்டுமென்றுணர்த்தியது. (௩௯)

## அவதாரிகை.

பரமார்த்தஞானி நாமரூபங்களொன்றையுங் கிரஹியாமல் எப்போதும் பரிபூர்ணசிதானந்த பிரமசைதன்யமாகவே யிருப்பானென்கின்றார்.

## கவிதை

நாமரூபங்களாதிசகலமு நன்காராய்ந்து..............................※
தாமலவென்றுநீக்கித் தகுபரமார்த்தவித்திங்..............................※
கோமெனும்புரணசச்சிதானந்த வொருமையாகிச்..............................※
சோமனேர்மதியிற்சீதந் தோன்றிடவிளங்குமன்றே..............................※

(இ-ள்) நாமரூபங்களாதி - பெயர் உருவம்முதலான, சகலமும் - சகலபிரபஞ்சத்தையும், நன்காராய்ந்து - தீர்க்கவிசாரணை செய்து, தாமலவென்று - (ஆத்மாம்சமான) தாமல்லவென்று, நீக்கி - தள்ளி, தகு - தக்க, பரமார்த்தவித்து - பரமார்த்தமான பிரமசொரூபக்ஞானி, இங்கு - இங்கே, ஓமெனும் - பிரணவாகாரமாகிய, புரணசச்சிதானந்தவொருமையாகி - எங்குநிறைந்த சச்சிதானந்தஸ்வரூபத்தோன்றி, சோமனேர்மதியில் - பூர்ணசந்திரனுக்கொத்தபுத்தியில், சீதம் - உபசாந்தம், தோன்றிட - தோன்றும்படி, விளங்கும் - பிரகாசிப்பன்.

## தாற்பரியம்.

பாரமார்த்திகஞானமுள்ளவன் மாயாகற்பிதங்களான நாமரூபாதி பிரபஞ்சபேதங்களையெல்லாம்விட்டு எங்குமேகரூபமாய் நிறைந்த சிதானந்தமாய் விளங்குகின்ற பிரமசொரூபமாகவே யிருக்கிறானென்றுணர்த்தியது. (சய)

---

## அவதாரிகை.

ஞாதுரு ஞானம் ஞேயம் என்னும் திரிபுடி ஞானமுண்டாயிருக்க ஐக்கியபாவனையெப்படி கூடுமென்னிலுத்தரம்.

## கவிதை.

ஞாதுருஞானஞேய நவின்றிடுபேதமூன்றும்..............................※
போதரூபரான்மாதன்னிற் பொருந்துருதென்றுநின்ற..........※

பேதமாமவித்தைமாயை பிரிந்தவோர் சித்தானந்த...............*
வோதுமேகாகாரத்தாலொளிர்தருஞ்சுயமாத்தானே...............*

(இ-ள்) ஞாதருஞானஞேயம்-அறிபவன்-அறிவு-அறியப்படு பொருள், நவின்றிடு - என றுசொல்லுகின்ற, பேதமூன்றும் - மூன் றுபேதமும், போதரு - ஆத்மஞானிகட்குக்கைவந்த, பரான்மாதன் னில்-பரமாத்மாவினிடத்தில், பொருந்துறுதென்றும் - எப்போதும் அணுகாது, நின்ற பேதமாம் - பேதமாகநின்ற, அவித்தைமாயை- அவித்தியா மாயாகாரியங்களை, பிரிந்த - நீங்கிய, ஓர் - ஒப்பற்ற, சித் தானந்த - ஞானானந்தமான, ஓதும் - விசேஷமாகச்சொல்லப்பட்ட, ஏக - ஏகரூபமாகவுமிருக்கிற, ஆகாரத்தால் - சொரூபமாகையால், தான் - (அந்த பரமாத்மசைதன்னியமான) தான், சுயமா - அன்யா பேக்ஷையின்றி, ஒளிர்தரும் - பிரகாசிக்கின்றார். (எ-று.)

தாற்பரியம்.

ஞாதரு முதலான பேதங்களெல்லாம் மாயை அவித்தை யிவ ற்றில் கற்பிக்கப்பட்ட ஜீவேசுவரர்களுக்கே யல்லாமல் இவற்றிற்கு வேறாய் சிதானந்த சொரூபியாய் தானேவிளங்குகின்ற ஆத்மாவி னிடத்தில் ஒன்றுமில்லையென்றுணர்த்தியது. (சக)

---

அவதாரிகை.

ஏகாந்தத்தலமென்னுங் கவிதைமுதல் நாலுகவிதைகளால் மன னநியமங்களை நிதித்தியாசனமுகத்தாற்சொல்லி சுத்த சைதன்னிய வஸ்து தியானத்துக்குப் பிரத்தியக்ஷ பலத்தைச்சொல்லுகின்றார்.

கவிதை.

ஆன்மபோதவரணியிலே யமைந்தமதிமேலரணிதனை...............*
மேன்மையாச்சந்ததம்வைத்து மேவுதியானமதனத்தாற்...............*
றோன்றுகின்றவபரோக்ஷச்சுவாலை சர்வாஞ்ஞானமெனு...............*
மேன்றமயல்செயிந்தனத்தை யெளிதிற்றகித்துவிடுமன்றே...............*

(இ-ள்) ஆன்மபோதவரணியில் - ஆத்மஞானமென்னுமரணி க்கட்டையில், அமைந்த - பொருந்திய, மதி - மனனமாகிற, மேல ரணிதனை - மேலரணியை, மேன்மையா - பெருமையாக, சந்ததம்-

இடைவிடாமல், வைத்து - வைத்து, மேவு - செய்யப்போந்த, தியானமதனத்தால் - தியானமாகிறகடையுந்தொழிலால், தோன்றுகின்ற - உண்டாகின்ற, அபரோக்ஷச்சுவாலை - பிரமசைதன்னியதெரிசனமாகிற அக்கினிசுவாலையானது, சர்வாஞ்ஞானமெனும் - சமஸ்த அஞ்ஞானங்களாகிற, மயல்செய் - மயக்கத்தையுண்டுபண்ணும், இந்தனத்தை - விறகை, எளிதிற் - சுலபமாக, தகித்துவிடும் - சொரூத்திப்போடும், (எ-று.)

## தாற்பரியம்

அந்தக்கரணத்தை யரணிக்கட்டையாக்கி மனனத்தை மேலரணியாகவைத்து சொரூபத்தியானத்தையே மதனக்கிரியையாகச் செய்தால் அகண்டாகாரவிருத்திஞானமென்னும் அக்கினிச்சுவாலையுண்டாய் ஆவரணவிக்ஷேபம் முதலான பரிவாரங்களோடுகூடி ஆத்மசொரூபத்தைமறைக்கின்ற மூலாஞ்ஞானமாகிறவிறகை தகித்துவிடும் இதுவே சுவரூபத்தியானத்தின் பயனாகுமென்றுணர்த்தியது

---

## அவதாரிகை.

ஜீவ-பர-ஐக்கியஞானத்தினாலே அவித்தியாகற்பிதமான இருள் நீங்கினவுடன் பரமாத்மசுவரூபம் தானேவிளங்குமென்கின்றார்.

## கவிதை.

அருணோதயத்தாலிருணீங்க வாதித்தன்றான்றோன் றுதல்போற் ※
றெருளும்விவேகத்தபரோக்ஷஞ் சித்தியானாற்சேடமற.........※
மருளுமனாதியவித்தையெனும் வளர்மாமோகத்தமசகல.........※
அருணமெய்யான்மாசுவயந்தோன்று மறிஞருளத்திலகலாமே...※

(இ-ள்) அருணோதயத்தில்-அருணதேவனுதயத்தினால், இருள்-இருட்டானது,நீங்க-நீங்கவே, ஆதித்தன்றான்-பின்புசூரியன், தோன்றுதல்போல-உதித்தல்போல, தெருளும்-தெளியத்தக்க, விவேகத்து-வஸ்துவிவேகத்தினாலே, அபரோக்ஷம்-அகண்டாகாரவிருத்திஞானமானது, சித்தியானால்-சித்திக்குமானால், சேடமற-முழுதும், மருளும் - மயங்குதற்கிடமான, அநாதி-அநாதியாயுள்ள, அவித்தையெனும் - அஞ்ஞானமாகிற, வளர்-விருத்தியடைகின்ற, மாமோக-மிக்க

மோகமாகிற, தமசு - இருட்டானது, அகல - நீங்கவே, அருள்-அருள்வடிவமான, மெய்யான்மா - நித்தியமான வாத்மா, சுயந்தோன்றும் - தானேவிளங்கும், அறிஞனுளத்தில் - ஞானியினுள்ளத்தில், அகலாமே - நீங்காமல். (எ-று.)

தாற்பரியம்.

அருணோதயத்தினால் அந்தகாரம்நீங்கினவுடனே எல்லாருடையகண்களுக்கும் விஷயமாக சூரியன்றோற்றுவதுபோல பிரமாபரோக்ஷஞானத்தினால் அஞ்ஞானவித்தியாமயமான பேரிருள்முழுதும் நீங்கினவுடனே ஆத்மாவானவர் சுத்தவிருத்திக்கு விஷயமாகத்தானே தோற்றுவரொன்றுணர்த்தியது. (சசு)

---

அவதாரிகை.

அபரோக்ஷஞானசொரூபியான ஆத்மா எப்போதும் கிடைத்திருக்க இப்போதுகிடைத்தாரென்பது எதனாலென்னில் உத்தரம்.

கவிதை.

சந்ததம்பிரத்யகான்மா தனைப்பிரியாதுநிற்க.......................*
பந்தமாமவித்தையாலே பலித்திடாதென்னவேறுஞ்...............*
சிந்தனையுண்டாம்மோகந் தீர்ந்திடக்கிடைத்தல்போலும்.........*
கந்தரவணியைத்தேடிக் கழுத்துறல்கண்டதொப்ப...............*

(இ-ள்) சந்ததம் - எப்போதும், பிரத்யகான்மா - பிரத்யகாத்மாவானவர், தனை - தன்னை, பிரியாதுநிற்க - பிரியாதவராயிருக்க, பந்தமாம்-பாசஸ்வரூபமான, அவித்தையாலே-அஞ்ஞானத்தாலே, பலித்திடாதென்ன - அடையாததுபோல், வேறுசிந்தனையுண்டாம்-வேற்றுமையானநினைவுண்டாகும், மோகம்-அந்தவஞ்ஞானமானது தீர்ந்திட - ஒழிந்தால், கிடைத்தல்போலும் - அப்போது அடைந்ததுபோலாகும், கந்தரவணியை - தன்கழுத்திற்றரித்திருந்த ஆபரணத்தை, தேடி - புறத்தெங்குணுந்தேடி, கழுத்துறல் - கழுத்திலிருந்ததை, கண்டதொப்ப - பின்பு ஞாபகம்வந்து தெளிந்துகொண்டதுபோல. (எ-று.)

தாற்பரியம்.

ஒரு யுவதிஸ்த்ரீயானவள் தனதாபரணங்களெல்லாவற்றையுங்கழற்றிவைத்து ஸ்நானஞ்செய்து பின்பு ஒருகண்டாபரணமாகிய முத்துமாலையைமாத்திரம் கழுத்தில் தரித்துக்கொண்டிருக்கையில் தன் புருஷனுடைய சங்கேதசமாசாரங்களைத் தோழிசொல்லக்கேட்டு மகிழ்ந்து முத்துமாலையைமறந்து தேடும்போது கழுத்திலிருக்கிறதேயென்று தோழிசொன்னமாத்திரத்தில் அவளதைக்கண்டதுபோல எப்போதுமே சமீபித்திருக்கு மாத்மாவை அஞ்ஞானத்தினலே அடையாததுபோலவும் அஞ்ஞானநீங்கினவுடனே அடைந்ததுபோலவும் காண்கிறுன் எண்ணியதியப்பட்ட ஒன்பதுபேருக்கு வேறுன தன்னை பத்தாமவனென்றறியாமல் துக்கப்படுகின்ற தசமபுருடன் போலதொண்ணூற்ருறுதத்துவங்களோடுங்கூடாமலிருக்கிற தன்னைத் தொண்ணூற்றேழாமவனென்றறியாமல் அவித்தையினலே பிரமித்து துக்கப்படுகின்றவன் அஞ்ஞானம்போனவுடனே அப்போது தான் கிடைத்ததுபோலக் காண்கிறுனென்றுணர்த்தியது. (சச)

---

அவதாரிகை.

உலகத்தில் சுவபாவகுணத்துக்குமாற்றமில்லையாதலால் ஜீவாத்மாவுக்கு பரமாத்மாவோடு ஐக்கியங்கூடாதென்னில் உத்தரம்.

கவிதை.

தாணுவிற்புருடன்போலச் சார்ந்திடுமஞ்ஞானத்தான்............*
மாணுயர்பிரமந்தன்னில் வயங்குறுசீவத்தன்மை................*
காணுமெய்ஞ்ஞானத்தாலே கற்பிதமாகநீங்கும்..................*
சேணுறுமிரவிதோன்றச் செறியிருளிரிதல்போல................*

(இ-ள்) தாணுவில் - கட்டையில், புருடன்போல - புருடத்தன்மையாரோபிக்கப்பட்டதுபோல, சார்ந்திடும்-சார்கின்ற, அஞ்ஞானத்தால் - அஞ்ஞானத்தினலே, மாணுயர்பிரமந்தன்னில் - மாட்சிமையோடுயர்ந்த - பரப்பிரமத்தினிடத்தில், வயங்குறும் - தோற்றும், சீவத்தன்மை - சீவதன்மம், காணும் - கைவந்த, மெய்ஞ்ஞானத்தாலே - சத்தியஞானத்தால், கற்பிதமாக - பொய்யாக, நீங்கும் - ஒழி

யும், சேணுறும்-ஆகாயமார்க்கத்திற்செல்லும், இரவிதோன்ற-சூரியனுதித்தமாத்திரத்தில், செறி - மிகுந்த, இருளிரிதல்போல-இருள் நீங்கினதுபோல. (எ-று.)

தாற்பரியம்.

இருட்டிலுலே கட்டையைக்கள்ளனென்று சந்தேகித்து பயப்படுவதுபோல அஞ்ஞானத்திஞலேபிரமத்தைஜீவனென்றெண்ணித் துன்பமடைகிறுன் அஞ்ஞானநீங்கி ஜீவனுடைய நிஜஸ்வரூபந்தெரிந்தவுடனே கற்பிதமான ஜீவத்தன்மையானது முழுதும் நீங்கிப் போகின்றதென் றுணர்த்தியது. (சரு)

---

அவதாரிகை.

ஆனுல் யான் எனதென்று தோற்றப்பட்ட சாக்கிரத்திலேதானே யான் எனதென்னு மஞ்ஞானம்போமோ வென்னில் உத்தரம்.

கவிதை.

தத்துவவைக்யசொரூபானுபவத்தாற் சார்ந்திடுஞ்சத்தியஞானம். .*
மித்தையஞ்ஞானத்தியானெனதென்னும் விகற்பபாவனைகளைநீக்கு
சித்தமார்மோகத்திசைமயக்கந்தான் தினகரனுதித்திடத்தீரும்* [ஞ்]
அத்திறன்ஞானிக்குலகெலாந்தானுயமர்தருசித்தியுண்டாமே......*

(இ-ள்) தத்துவவைக்ய சொரூபானுபவத்தால் - உண்மையாகிய ஜீவ பர ஐக்ய சொரூபானுபவத்திஞலே, சார்ந்திடும் - உண்டான, சத்தியஞானம் - மெஞ்ஞானம், மித்தை - பொய்யாகிய, அஞ்ஞானத்து - அஞ்ஞானத்திஞலே, யானெனதென்னும் யான்-எனதென்றுசொல்லும், விகற்பபாவனைகளை - வேற்றுமைகளை, நீக்கும்-போக்கும், சித்தமார் - சித்தத்திற்பொருந்திய, மோகம் - மயங்குதற்கிடமான, திசைமயக்கந்தான் - திக்பிரமமானது, தினகரனுதித்திட-சூரிய உதயமானவுடனே, தீரும் - நீங்கிவிடும், அத்திறன்-அதுபோல, ஞானிக்கு - ஞானவானுக்கு, உலகெலாம்-பிரபஞ்சமுற்றும், தானுயமர்தரு - தானுக இருக்கும், சித்தி - சித்தி, உண்டாம் - உண்டாகும். (எ-று.)

தாற்பரியம்

இரவில் காட்டில் கிழக்கு மேற்கு தெரியாமல் வழிதப்பித்திரி

இன்றவனது திக்ப்ரமயை உதயமாகாநின்ற சூரியனது பிரகாசமானது போக்குவதுபோல யானெனதென்கின்ற அகங்கார மமகாரங்களாகிய அஞ்ஞானத்தையெல்லாம் தத்துவஸ்வரூபானுபவத்தினாலுண்டான ஞானமானது உடனேபோக்குமென்றுணர்த்தியது. (சகூ)

---

அவதாரிகை.

இப்படி ஸ்வரூபானுபவம்பண்ணும் மகாபுருடன் ஞானதிருஷ்டியினாலே சகலமான திரிசியங்களையும் ஸ்வாத்மாவிலேயே வேறறக்காண்பனென்கின்றார்.

கவிதை.

தேர்ந்தவிஞ்ஞானயோகி சிறந்திடுஞானநோக்காற்...............※
சேர்ந்திடுமகிலமுற்றுந் திகழ்தருமான்மசத்தில்...................※
சார்ந்தகற்பிதமென்றோர்ந்துசர்வமுமேகாகார.....................※
மார்ந்தவப்பரமான்மாவென் றகமுறவினிதினோக்கும்...............※

(இ-ள்) தேர்ந்த - தெளிவடைந்த, விஞ்ஞானயோகி - ஞானயோகியானவன், சிறந்திடு - சிறந்த, ஞானநோக்கால்-விவேகமாகிற கண்ணினாலே, சேர்ந்திடும் - நிறைந்த, அகிலமுற்றும்-பிரபஞ்சமெல்லாம், திகழ்தரும்-விளங்கும், ஆன்மசத்தில்-கூடஸ்தாத்மாவில், சார்ந்த-தோற்றிய, கற்பிதமென்று-கற்பனைகளென்று, ஓர்ந்து-தெளிந்து சர்வமும் - யாவும், ஏகாகாரமார்ந்த-ஏகஸ்வரூபமாகஇருக்கிற, அப்பரமான்மாவென்று - அந்தபரமாத்மாவேயென்று, அகமுற - உள்ளத்திற்பொருந்த, இனிதின் - இனிதாக, நோக்கும் - பார்ப்பன். (எ-று.)

தாற்பரியம்.

நன்றாக சாஸ்திரவிசாரணை செய்த யோகியானவன் விவேகத்தினால் சகலமும் ஆத்மாவிலிருப்பதாகவும் சகலத்தையும் ஒரே ஆத்மசொரூபமாகவும் அறிகிறானென்றுணர்த்தியது. (சஎ)

---

அவதாரிகை.

நானுவிதமாகத் தோற்றும் இந்தத்திரிசியங்களையெல்லாம் ஆத்மாவிலெப்படி பேதமறக்காணலாமென்னில் உத்தரம்.

### கவிதை.

இந்தச்சருவசெகத்தெல்லா மேகான்மாவின் வடிவாகும் ........*
வந்தக்குடமுன்னயவெலா மண்ணையன்றிவேறுண்டோ ........*
தொந்தப்பொருள்யாவுமான்ம சொரூபமல்லாலில்லைச் ...*
சிந்தைக்கினிதாமின்னோக்கந் திகழச்சிக்குமெய்ஞ்ஞானி ....*

(இ-ள்) இந்தச்சருவசெகத்தெல்லாம் - திரிசியமாகிய இந்தப் பிரபஞ்சமெல்லாம், ஏகான்மாவின் வடிவாகும் - ஒன்றான பிரம்மசொரூபமாகும், வந்தக்குடமுன்னயவெல்லாம் - செய்யப்பட்டுண்டான கடமுதலியபாண்டங்களெல்லாம், மண்ணையன்றிவேறுண்டோ - மண்ணைத்தவிரவேறுமோ, (அதுபோல) தொந்தப்பொருள்யாவும் - வியோமாதி தொடர்பான சகலவஸ்துக்களும், ஆன்மசொரூபமல்லால் வேறில்லை - பிரம்மசொரூபமல்லாமல் வேறில்லை, சிந்தைக்கினிதாமின்னோக்கம் - மனோரம்மியமான இந்தஞானப்பார்வை, திகழச்சிக்குமெய்ஞ்ஞானி - மெய்ஞ்ஞானிக்குவிளங்குதலால் ஆனந்தமடைகின்றான். (எ-று.)

### தாற்பரியம்.

மண்ணிலிருந் துண்டான கடகலசாதி மண்ணைத்தவிரவேறின்மைபோல ஆத்மாவினின்றுண்டாய் ஆத்மசத்தையால் சத்தாய்விளங்குகின்ற பிரபஞ்சமெல்லாம் ஆத்மாவைவிட வேறல்லவென்று விவேகிஞானக்கண்ணால் ஏகாத்மசொரூபமாய்க்கண்டு மகிழ்வனென்றுணர்த்தியது. (சஅ)

---

### அவதாரிகை.

இங்ஙனம் ஆசங்கையின்றி யிருக்குஞ் சுத்தாவத்தையே சீவன்முத்தியென் றுணர்த்துகின்றார்.

### கவிதை.

பூருவவுபாதிபுகலுமுக்குணங்கள் புரையறவிடுவனல்விவேகி .....*
சார்தருஜீவன் முத்தியிங்கதுவே சால்புறுமச்சீவன்முத்தன் ........*
சீருறுசச்சிதானந்தவடிவாய்த் திகழ்தலாற்பிரமரகீடம் ........ .*
ஒருருவாம்போற்பாவனைடாலே யொப்பிலப்பரம்பொருளாமே ...*

(இ-ள்) பூருவவுபாதி - முன்சொன்ன, (ஸ்தூல சூக்ஷம காரண) சரீரோபாதிகளையும், புகலுமுக்குணங்கள் - மூன்றாகச்சொல்லும் சத்துவாதிகுணங்களையும், பூனயற - களங்கமற, விடுவன் - விட்டுவிடுவோன், நல்விவேகி - நல்லவிவேகத்தையுடையஞானி, சார்தருஜீவன் முத்தியிங்கதுவே - அதுதான் இவ்வுலகத்தில் கைவந்தஜீவன்முத்தி, சால்புறு-மேன்மைபொருந்திய, அச்சிவன்முத்தன்-அந்தஜீவன்முத்தியையுடையவன், சீருறு-சிறப்புப்பொருந்திய, சச்சிதானந்தவடிவாய் - சச்சிதானந்தஸ்வரூபமாக, திகழ்தலால் - விளங்குகிறபடிபால் பிரமரகீடம் ஒருருவாம்போல் - (வண்டெடுத்தபுழுவும் - ஒரேவண்டுருவமாகிற) பிரமரகீடநியாயமாக, பாவனையாலே - ஸ்வரூபாவனையால், ஒப்பில் - உவமையற்ற, அப்பரம்பொருளாமே - அந்தபிரமசொரூபத்தையடைவான். (எ-று.)

தாற்பரியம்.

ஸ்தூலாதி சரீரோபாதிகளையும் சத்துவாதிகுணங்களையும் விடுவதே ஜீவன்முத்தியாகும் அப்படிஜீவன் முத்தனானவனே பிரமரத்தைச் சிந்தித்தபுழுவானது அந்தபிரமரவடிவானதுபோல சச்சிதானந்த ஸ்வரூபானுபவத்தினாலே சச்சிதானந்தப் பிரமமாவன் என்றறிய உணர்த்தியது. (சகூ)

---

அவதாரிகை.

மோகத்தைக்கடந்துநீங்கிய பரமயோகி நித்தியசுகியாக விளங்குகின்றானென் றுணர்த்துகின்றார்.

கவிதை.

மோகவாரிதியைஞானமாம்புணையான் முற்றுறக்கடந்துநின் றிகலும்
வேகமாம்ராகத்வேஷராக்கதனை விவேகமாம்வாளினாற்றடிந்து......*
சோகமில்சாந்திசமந்தமமுதலாஞ் சுத்தநற்குணமுளயோகி ......*
யேகமாமான்மாராமனாய்த்தோன்ற விளங்குறுமிராஜயோகத்தில்..*

(இ-ள்) மோகவாரிதியை - அஞ்ஞானமாகிற சமுத்திரத்தை, ஞானமாம்புணையால்-ஞானமாகிறதெப்பத்தினால், முற்றுறக்கடந்து-முழுதுந்தாண்டி, நின்றிகலும்-அவ்விடத்தெதிர்த்துநின்று யுத்தஞ்செய்யும், வேகமாம்-தீவரம்பொருந்திய, ராகத்வேஷ-ராகம்துவேஷம்

முதலானவையாகிற , ராக்கதரை - அரக்கர்களை , விவேகமாம்- விவேகமாகிற, வாளினால் - வாளாயுதத்தினாலே, தடிந்து - கொன்று, சோகமில் - தளராத, சாந்தி - சாந்தம், சமந்தமமுதலாம் - சமத மாதிகளான, சுத்தநற்குணமுளயோகி - பரிசுத்தம்பொருந்தியகுண முடைய-(முன்சொன்ன) ராஜயோக சமாதிநிஷ்டா சம்பன்னனான வன், ஏகமாமான்மாராமனாய் - ஒன்றாகிய ஆத்மாவிலேயே ரமிப்பவ னாக, தோன்ற - தோன்றும்படி , இராஜயோகத்தில் - இராஜயோக மடைந்து, இலங்குறும் - விளங்குகிறான், எ-று.

தாற்பரியம்

மோகசமுத்திரத்தைக்கடந்துஇராகத்துவேஷாதிராக்ஷஸரை யழித் து சாந்தியோடுகூடிய ராஜயோகியானவன் ஆத்மாராமனாகவிளங்குகி றானென்று சொன்னதால் லவணசமுத்திரத்தைக்கடந்து ராவணாதிக ளையடித்து சீதாதேவியோடுகூடி சிங்காதனமேறி ராஜயோகமடை ந்து விளங்குகின்ற ராமமூர்த்தியாகிய சகுணப்பிரமத்தை வுவமையா கக்காட்டி உணர்த்தியது. (ருய)

---

அவதாரிகை.

ஜீவன் முத்தனுடைய இலக்கணத்தைச்சொல்லுகின்றார்.

கவிதை

இசைத்திடும்யோகிபுறத்தனித்தியமா மிச்சைகளனைத்தையுநீக்கி...*
நிசத்தனதான்மநித்தியானந்த நிகழ்தரச்சாஸ்வதமாக .............*
அசைத்திடலில்லாக்கடத்துறுதீப மாமெனவந்தரங்கத்திற்.........*
கசத்ததேகோகம்விடுத்தினிதொளிருங் கலைநிறைமதியெனக்காண .*

(இ-ள்)இசைத்திடும்யோகி-முன்சொன்ன இராஜயோகியானவ ன், புறத்தநித்தியமாம் - புறம்பாகவும் அநித்தியமாகவுமிருக்கின்ற, இச்சைகளனைத்தையும் - விஷயப்பற்றுகளெல்லாவற்றையும், நீக்கி- விட்டு, நிசத்தனது - தன்னுடைய, ஆன்மநித்தியானந்தம் - நித்தி யமானசொரூபானந்தம், நிகழ்தர - தோன்றும்படி, சாஸ்வதமாக- எப்போதும், அசைத்திடலில்லா - காற்றினாலசைக்கப்படாத, கடத் துறுதீபமாமென - குடத்திலேற்றியவிளக்கைப்போல, அந்தரங்கத்

தில் - உள்ளத்தில், கசத்த - வெறுக்கத்தக்க, தேகோசம் - தேகத்தை நானென்றெண்ணும் பாவனையை, விடுத்து - விட்டு, இனிது-இனிதாக, ஒளிரும் - பிரகாசிப்பான், கலைநிறைமதியென - பூர்ணசந்திரன்போல, காண - தோன்றும்படி. எ-று

### தாற்பரியம்.

சிவயோகி தனது அனுபவத்தைத்தானே யனுபவித்து மகிழ்ந்துகொள்ளவேணுமே யல்லாமல் மற்றொருவரோடு சொல்லவும் மற்றவரனுபவிக்கவுங் கூடாதென் றுணர்த்தியது. (௫௪)

---

### அவதாரிகை.

இத்தன்மையவான ஜீவன்முத்தனானவன் பிராரப்தானுகுணமாக சஞ்சரித்துக்கொண்டிருந்த போதிலும் ஒன்றிலும் பற்றாமலிருப்பானென்கின்றார்.

### கவிதை.

சீவன்முத்தமுனிவரனித் தேசமுதலாமுபாதிகளின் ..........*
பாவகத்தினின்றும் பற்றென்றில்லான் கடமடவான் ..........*
ஆவதென்னச்சருவஞ்ஞனாயுமூடனெனவிருந்து ..........*
தாவுபவனெனத்தொழிலிற் சங்கமின்றிச்சரித்திடுமே ..........*

(இ-ள்) சீவன்முத்தமுனிவரன் - ஜீவன்முத்த ஞானயோகியானவன், இத்தேசமுதலாமுபாதிகளின் - உபாதிகளாகிய இந்தஸ்தூலாதிசரீரங்களினது, பாவகத்தினின்றும்-பாவனையிலிருந்தாலும், பற்றென்றில்லான் - (அவற்றின் தருமங்களாகிய உற்பத்திநாசமுதலானவற்றோடு) சம்பந்தப்படாதவன், கடமடவானவதென்ன கடம் மடம் முதலியஉபாதிகளிலிருக்கும் ஆகாசம்போல, (அன்றியும்) - சருவஞ்ஞனாயும்-சர்வஞ்ஞனாகஇருந்தும், மூடனெனவிருந்து - ஒன்றுந்தெரியாதமூடன்போலிருந்து, (அன்றியும்)-தாவுபவனென-எவற்றினுஞ்சரிக்கின்ற காற்றானதுபோல, தொழிலில்-எல்லாக்கன்மங்களையும் போகங்களையும், சங்கமின்றி-இச்சாசம்பந்தமில்லாமல், சரித்திடும் - பொருந்தி சஞ்சரிப்பானென் றுணர்த்தியது.

### தாற்பரியம்.

எப்படி ஆகாயமானது கடமடாதியுபாதிகளின் உள்ளும்புற மும்பும் நிறைந்து வியாபித்துக்கொண்டு அந்தவுபாதிகளி னுற்பத்தி நாசாதிகளாற் சம்பந்தமில்லாமலிருக்கிறதோ அப்படியேஜீவன்முத் தனும் ஜீவாதிசரீரோபாதிகளில் உள்ளும் புறம்பும் நிறைந்து வியா பித்திருந்தும் அவற்றின் பிறப்பிறப்பு பிணிமூப்புமுதலானவற்றில் சம்பந்தமில்லாதவனாகவும் எல்லாந்தெரிந்திருந்த போதிலும் தெரி யாத மூடன்போலவே எல்லாக்கன்மங்களையும் பலத்தி லிச்சையின் றி செய்துக்கொண்டும் வாயுவானதுபோல ஒருவிஷயங்களிலு மொ ட்டாமலே புசித்துக்கொண்டும் சஞ்சரித்துக்கொண்டு மிருப்பனெ ன்றுணர்த்தியது. (ருஉ)

---

அவதாரிகை.

பிராரப்த கன்ம மழிந்தவுடனே ஸ்தூலாதி சரீரோபாதிகளும் நீக்கிப்போய்விடும் உடனே ஜீவன்முத்தன் விதேகமுத்தியை யடை கிருனென்கின்றார்.

கவிதை.

தேகவுபாதிநீங்குதலுஞ் சீவன்முத்தமுநிவரன்றன் ..............✲
ஏகவியாபகாத்மாவி லிரண்டற்றொன் றும்விதேகமுத்தி...........✲
யாகநிறையுஞ்சலஞ்சலத்திலகல்வான்வானிற்றேசொளியிற்........✲
பாகமின்றிக்கலப்பதுபோற் பரமானந்தவடிவாமே...............✲

(இ-ள்) தேகவுபாதி - ஸ்தூலாதிசரீரோபாதிகள், நீங்குதலும்- ஒழிந்தமாத்திரத்தில், சீவன்முத்தமுனிவரன்றன் - முன்சொன்ன ராஜயோகியானவன், ஏகவியாபகாத்மாவில்-ஒன்றாய்ச் சர்வவியாபக மான பரமாத்மாவினிடத்தில், இரண்டற்று-நான்-நீ-என்பது முத லானயாதொரு விசேஷமுமின்றி, ஒன்றும்விதேகமுத்தியாக - அபி ன்னமாக விதேகமுத்தியையடைவான், (அஃதெங்ஙனமெனில்) நிறையுஞ்சலம் - நிறைந்தசலம், சலத்தில் - சலத்திலும், அகல்வான்- விரிந்தவாகாயம், வானில் - ஆகாயத்திலும், தேசு - சுடர், ஒளியில்- சுடரிலும், பாகமின்றிக் கலப்பதுபோல் - பகுப்பின்றிக் கலப்

பதுபோல, பரமானந்தவடிவாமே - பரமானந்த சொரூபத்தை, உறும்-அடைவன். எ-று.

### தாற்பரியம்.

பிராரப்த நாசத்தினாலே ஸ்தூலாதி சரீரநீங்கியபோது சுவானுபவ யோகியானவன் சலமுதலானவற்றில் சலமுதலானவை பேதமின்றிக் கலப்பதுபோல சர்வபரிபூரணமான பிரமத்தினிடத்தில் நிர்விசேஷனாகக்கலந்து ஐக்கிய மடைவானென்றுணர்த்தியது. (ருரு)

---

### அவதாரிகை.

பிரமத்தினது சர்வாதிசயத்தை மூன்றுகவிகளினாலே சொல்லுகின்றார்.

### கவிதை.

எந்தலாபத்தின்மிக்க விலாபமொன்றிலையோவெங்கும் ..........※
எந்தநீள்சுகத்தின்மிக்க விருஞ்சுகமிலையோவென்றும் ..........※
எந்தஞானத்தின்மிக்க வியலறிவிலையோவந்த ..........※
அந்தமில்பொருளேபிரம்ம மாமெனநிச்சயிக்க ..........※

(இ-ள்) எந்தலாபத்தின்மிக்க - யாதொருலாபத்தைக்காட்டிலும், லாபமொன்றிலையோ - வேறொருலாபமில்லையோ, எங்கும் - எவ்விடத்தும், எந்தநீள்சுகத்தின்மிக்க விருஞ்சுகமிலையோ - எந்தபேரின்பத்தைக்காட்டிலும் - வேறொருபேரின்ப மில்லையோ, என்றும்- எப்போதும், எந்தஞானத்தின்மிக்க-எந்தஞானத்தைக் காட்டிலும், இயலறிவு - வேறொருஞானம், இலையோ - இல்லையோ, அந்த வந்தமில்பொருளே - அந்தநாசமில்லாதவஸ்துவே, பிரம்மமாமென-பிரமமென்று, நிச்சயிக்க - நிச்சயிக்கவேண்டும். எ-று.

### தாற்பரியம்.

பிரமலாபமே - பிரமலாபம் - பிரமசுகமே-பரமசுகம்-பிரமஞானமே-பரமஞானம் என்றுணர்த்தியது. (ருச)

---

அவதாரிகை.

இதுவுமது

கவிதை.

யாதொன்றைக்கண்டோன்பின்னர் காணவேண்டுவதொன்றின்றே
யாதொன்றேயானபின்ன ரிடர்ப்பவமற்றுமின்றே............... *
யாதொன்றையுணர்ந்தபின்னர் ஞேயம்வேறெய்தலின்றே....... *
யாதொன்றுமுற்றுமாயதது பரம்பொருளென்றோர்க........... *

(இ-ள்) யாதொன்றைக்கண்டோன்-யாதொரு வஸ்துவைக்கண்டவன், பின்னர்காணவேண்டுவதொன்றின்றே-பின்புகாணவேண்டுவதுவேறொன்றில்லையோ, யாதொன்றேயானபின்னர்-யாதொருவஸ்துவாகஆனபின்பு, இடர்ப்பவமற்றுமின்றே-வேறொருபிறப்பில்லையோ, யாதொன்றையுணர்ந்தபின்னர்-யாதொன்றையறிந்தபின்பு, ஞேயம் வேறெய்தலின்றே-வேறேயறியத்தகும் விஷயமில்லையோ, யாதொன்று - யாதொருவஸ்துவானது, முற்றுமாயது - எங்குமுள்ளதோ, அது-அதுதான், பரம்பொருளென்று-பிரமமென்று, ஓர்க-நிச்சயிக்கவேண்டும். எ-று.

தாற்பரியம்.

பிரம்மானுபவத்தின் மேலானசித்தி வேறில்லையென்றுணர்த்தியது.

---

அவதாரிகை.

இதுவுமது

கவிதை.

மேலுங்கீழுமிடைநடுவும் வியாபித்தெங்கும்பூரணமாம் .......... *
எலுஞ்சச்சிதானந்தமே காத்வயநித்தியமனந்தம் ................. *
நாலுவேதமாவாக்கிய நவிற்றுகின்றதேததுதான்................. *
மூலாதாரப்பிரமமென மோகமின்றிநிச்சயிக்க...................... *

(இ-ள்) மேலுங்கீழுமிடைநடுவும்-மேலேயும்-கீழேயும்-குறுக்

கேயும்-நடுவிலும், வியாபித்தெங்கும்பூரணமாம் - எங்கும்பூரணமான வியாபகமுள்ளதாகவும், ஏலும்சச்சிதாநந்தம் - நிறைந்தசத்தாகவும், சித்தாகவும் - ஆனந்தமாகவும், ஏகாத்வயம் - இரண்டற்றதாகவும், நித்தியம் - நித்யமாகவும், அனந்தம் - அபரிச்சின்னமாகவும், நாலுவேதமாவாக்கியம் - நாலுவேதங்களின்மகாவாக்கியங்கள், நவிற்றுகின்றதேது - எந்தப்பொருளைச்சொல்லுமோ அதுதான், மூலாதாரம் - எவற்றிற்குமூலமான, பிரமமென் - பிரமமென்று, மோகமின்றி - மயங்காமல், நிச்சயிக்க - நிச்சயிக்கவேண்டும். எ-று.

தாற்பரியம்.

எங்கும் நிறைந்து அபரிச்சின்னமாயிருப்பது பிரமமென்றுணர்த்தியது. (௫௫)

---

அவதாரிகை.

மேலும் பிரமநிச்சயத்தை அனாத்ம நிஷேதமார்க்கத்தினாலே காண்பிக்கின்றார்.

கவிதை.

அதத்துவாவிருத்தியாலே யகிலவேதாந்தமெல்லாம்.................*
விதந்திதுவிதுவன்றென்றே விலக்கிலக்கணையாற்காட்டும் .........*
இதந்தருமகண்டானந்த வேகமாமதுவேபிர்ம .......................*
சுதந்தரவடிவென்றோர்ந்து துணிந்துநிச்சயிக்கவேண்டும்.........*

(இ-ள்) அதத்துவாவிருத்தியாலே-அதத்வியாவிர்த்தியுக்தியினாலே, அகிலவேதாந்தமெல்லாம் - சமஸ்தவேதாந்தநூல்களும், விதந்து - உறுதியாக, இதுவிதுவன்றென்று - இஃதன்று இதுவுமன்றென்று, விலக்கு - அனாத்மநிஷேதஞ்செய்யும், இலக்கணையால் - லக்ஷணையினாலே, காட்டும் - காட்டுகின்ற, இதந்தரும் - இன்பத்தைத்தராநிற்க, அகண்டானந்தம் - அபரிச்சின்னமான ஆனந்தசுவரூபமாகவும், ஏகமாம் - அத்விதியமாகவுமிருக்கிற, அதுவே - அதுதான், பிர்மசுதந்தரவடிவென்று - பிரமத்தின் அசாதாரண ஸ்வரூபமென்று, ஓர்ந்து - அறிந்து, துணிந்து - அச்சமின்றி, நிச்சயிக்கவேண்டும் - உறுதிப்படுத்தவேண்டும். எ-று.

தாற்பரியம்.

உபநிஷத் வாக்கியங்களினாலே இஃதன்று இஃதன்று என்று அனாத்மாக்களை நிஷேதித்துக் குறிப்பாகக்காட்டப்பட்டதே அபரிச்சின்னானந்த ரூபமான பிரமமென் றறியவேண்டுமென் றுணர்த்தியது. (௫எ)

அவதாரிகை.

பிரமன் முதலானோரானந்தமும் அகண்டமான பிரமானந்தத்தினது லேசமேயென்கின்றார்.

கவிதை.

அகண்டானந்தவாரிதியி னணுகுந்திவலையெனலாகுஞ் ............*
சுகங்கூர்பிரமன் முதலாய தொல்லையமரரானந்தம் ..................*
முகந்துகணிக்கிற்சதமேற்ற முறையாற்றாரதம்மியமா ............*
வுகந்தொன்றற்கொன்றதிகமா வோங்குமதற்கொப்பாகாதே......*

(இ-ள்) அகண்டானந்தவாரிதியில் அபரிச்சின்னமான வானந்தசமுத்திரத்தினின்றும், அணுகுந்திவலை - தெறித்ததிவலை, எனலாகும் - என்றுசொல்லத்தக்கதாகும், சுகங்கூர்பிரமன் முதலாயதொல்லையமரர்-சுகத்தைஅனுபவிக்கின்ற பிரமன் முதலானதொன்றுதொட்டுவந்ததேவர்களுடைய, ஆனந்தம் - ஆனந்தமானது, முகந்துகணிக்கில் - அளவிட்டால், சதமேற்றமுறையால் - நூறுநூறுபங்கு, தாரதம்மியமாவுகந்து-தாரதம்மியமாகவுயர்ந்து, ஒன்றற்கொன்றதிகமாக - ஒன்றுக்கொன்றதிகமாக, ஓங்கும் - விருத்தியடையும், அதற்கொப்பாகாது - அதற்குச்சமானமாகாது. எ-று.

தாற்பரியம்

உலகத்தில் கொஞ்சசெல்வமுள்ளவனை மகராஜனென்பதுபோல பிரமானந்தசமுத்திரத்தின் றுளியை யடைந்த பிரமன் முதலானவர்களையு மானந்தமுள்ளவர்க ளென்கிறபடியால் அகண்டமாகிய பிரம்மானந்தமே எல்லாவானந்தத்துக்கு மேலான வானந்தமாகும் என்றுணர்த்தியது. (௫எ)

அவதாரிகை.

ஆன்மாவே மேலானவன்பிற் குரியவனொன்னுமிடத்து தேகா திபிரபஞ்சத்தில் மேலான அன்பு எப்படி உண்டாகிறதென்னில் அவற்றிலந்த ஆத்மாமுழுதுங் கலந்திருப்பதால் உண்டாகிறதென் கின்றார்.

கவிதை.

ஆன்மசைதன்னியத்தை யடைந்தொன்றுமகிலவஸ்து ..........※
மேன்மைசால்சித்திற்கூடும் விவகாரமாதலாலே ...... ..........※
வானிகர்பிரமன்பாலின் மருவியநெய்யதேபோற் ..............※
றுனிறைந்திலங்குமத்தாற் றனுவாதிசுகமாத்தோன்றும்...........※

(இ-ள்) அகிலவஸ்து - சமஸ்ததேகாதி பிரபஞ்சரூபமான வஸ் துவும், ஆன்மசைதன்னியத்தை யடைந்தொன்றும் - ஆத்மசைதன் னியத்தோடே கூடியிருக்கும், மேன்மைசால் - மேன்மைபொருந்தி ய, சித்திற்கூடும் விவகாரம் - சமஸ்தவிவகாரங்களும் சிற்சம்பந்தத் தாலுண்டாம், ஆதலாலே ஆனபடியால் வானிகர்பிரமம் - ஆகாயத்து க்கொப்பான பிரமமானது, பாலின்மருவிய நெய்யதேபோல்பாலி னிடத்து, ஜனித்தபோதே - சஹஜமாகக்கலந்திருக்கும்நெய்போல, தான் - தான், நிறைந்திலங்கும் - நிறைந்துவிளங்கும், அத்தால்-அத னால், தனுவாதிசுகமாய்த்தோன்றும் - தேகாதிபிரபஞ்சஞ் சுகமாய் விளங்கும். எ-று.

தாற்பரியம்.

பாலிலே நெய்போல பிரமம் தேகாதி சர்வப்ரபஞ்சங்களிலும் உள்ளும் புறம்பும் நிறைந்திருப்பதால் தேகாதிகளு மேலான வன் பிற்குரியனவாகின்றன வென்றுணர்த்தியது. (௫௧)

---

அவதாரிகை.

அந்த ஆத்மாசர்வத்தையும் வியாபித்துக்கொண்டிருக்குந் தன் மையை யின்னபடியென் றறியக்கூடாதென்று சுருதிகளிற் சொல் லியபடி சொல்லுகிறார்.

கவிதை.

இணையிலப்பரமரூப மின்னதென் றுணர்தற்கெட்டா ............✲
தணுவன்றுமகத்துமன்று மகன்றறக்குறுகிற்றன்றும் ............✲
எணும்பிறப்பிறப்புமின்று மியல்குணநிறம்பேரின்றுந் .........✲
துணையறத்தன்னுளெல்லாந் தோன்றிடவிளங்குமன்றே............✲

(இ-ள்) இணையிலப் பரமரூபம் - ஒப்பற்ற அந்தப் பிரமசொரூபம், இன்னதென் றுணர்தற்கெட்டா - இத்தன்மையதென் றறிதற்கரிதாம், அணுவன்று - அணுப்பரிமாண முள்ளதுமல்ல, மகத்துமன்றும் - மகத்பரிமாணமுள்ளதுமல்ல, அகன்றறக் குறுகிற்றன்றும் - நீண்டதுமல்ல குறுகினதுமல்ல, எணும் பிறப்பிறப்புமின்றும் - எண்ணுகின்ற பிறப்பும் இறப்புமில்லாததாகும், இயல்குணம் - நிறம்பேரின்றும் - வடிவுகுணம் நிறம் பெயர் இவை யொன்றுமுள்ளதுமல்ல, துணையறத்தன்னுளெல்லாம் - சகாயமின்றி தனக்குள் சர்வமும், தோன்றிடவிளங்குமன்றே - பரம்பனாயாகத் தோன்றும்படி விளங்கும், அன்றே-அசை. எ-று. (தா-ம்) அணுவுக்கணுவாகவும் மகத்துக்கு மகத்தாகவும் ஆத்மாவிருத்தலால் ஓரளவிற்கும் எட்டாதென் றுணர்த்தியது. (௬௰)

---

(அ-கை) மேலும் இந்தப்பிரமவிஞ்ஞானத்தையே மூன்றுகவிகளாற் றெளிவாகச்சொல்லுகிறார்.

எப்பொருட்பிரகாசத்தாலே யிரவிமுன்னயசோதி ..............✲
செப்பமாய்விளங்குமத்தைத் திகழிவைவிளக்கலாகா ..............✲
இப்பொருள்விளக்குங்கண்க ளியன்மனமுதலெல்லாம் .........✲
அப்பரசித்விலாசத் தறிவதென் றுணரவேண்டும் .................✲

(இ-ள்) எப்பொருட் பிரகாசத்தாலே - எந்தவஸ்துப்பிரகாசத்தால், இரவிமுன்னயசோதி - சூரியன்முதலிய பிரகாசவஸ்துக்கள், செப்பமாய்விளங்கும்-செவ்வையாகவிளங்குகின்றனவோ, அத்தை- அவ்வுண்மைப்பொருளை, திகழிவைவிளக்கலாகா-விளங்குகின்ற சூரியன் முதலானவை விளக்கமாட்டாவோ, (மேலும்) இப்பொருள்விளக்கும்-இந்த திரிசியப்பொருள்களை விளக்குகின்ற, கண்களியன்மன

முதலவெல்லாம் - கண்கள் மனமுதலியவெல்லாம், அப்பரசித்விலாசத்து - அந்தப் பிரமசித்வியாபகத்தால், அறிவகென்றுணரவேண்டும் - அறியப் பெறுகின்றனவென் றுணரத்தக்கது. எ-று. (தா-ம்) சூரியன் முதலான சகலபிரகாசவஸ்த்துக்களும் ஆத்மப் பிரகாசத்தால் இன்னதின்னதென்றறியப்பட்டு விளங்கும் இவற்றால் ஆத்மா இத்தன்மையதென்றறியப்பட மாட்டாதாதலால் ஆத்ம பிரகாசமேலானதென் றுணர்த்தியது. (௬௧)

---

(அ-கை) சமஸ்த்தத்தையும் பிரகாசிப்பிக்கிற ஆத்மா அற்பமான புத்திக்குள்ளே எப்படி-பிரகாசிக்கிறதென்னில் திருஷ்டாந்தபூர்வமாய்ச்சொல்லுகிறார்.

பிரமசொரூபஞ்சுயமாகப் - பிறங்கிவியாபித்தகம்புறமும் .........*
எரியிற்காய்ந்தவயப்பிழம்ப-தென்னவகிலசகத்தெல்லாந் .........*
தெரியவிளங்கவிளக்குவித்துச்-செறிந்தெவ்விடத்தும்பிரியாது ...*
திரமாய்த்தானும்பிரகாசிக்குஞ்-செயலை யூகித்துணர்ந்திடுக.........*

(இ-ள்) பிரமசொரூபம் - ஆத்மசுவரூபம், சுவயமாகப்பிறங்கி வியாபித்து - தானேவியாபித்து விளங்கிக்கொண்டு, அகமும்புறமும் - உள்ளும்புறம்பும், எரியிற்காய்ந்த - அக்கினியிற்றப்தமான, அயப்பிழம்பதென்ன - இரும்புக்கட்டிபோல, அகில சகத்தெல்லாம் - சமஸ்தசகமெங்கும், தெரிய விளங்க விளக்குவித்து - தோன்ற விளங்கும்படி பிரகாசிப்பித்து, செறிந்தெவ்விடத்தும் பிரியாது - பொருந்தி யெவ்விடத்தும் நீங்காது, திரமாய்த்தானும் பிரகாசிக்கும் - நித்தியமாய்த்தானும் பிரகாசிக்கின்ற, செயலையூகித்துணர்ந்திடுக - தன்மையை விவேகயுக்தியாலறிந்துகொள்க. எ-று. (தா-ம்) அக்கினியானது இரும்புகட்டியில் உள்ளும்புறம்பும்வியாபித்து அதைப்பிரகாசிப்பித்துக்கொண்டு தானும்பிரகாசிப்பதுபோல பிரமமும்சர்வப்பிரபஞ்சத்திலும் உள்ளும்புறம்பும் ஏகரூபமாய்வியாபித்துக்கொண்டு அவற்றைப்பிரகாசிப்பித்து தானும்பிரகாசிக்குமென் றுணர்த்தியது. (௬௨)

இதுவுமது

ஆத்மஞானமிலாவிடத்தே-பிரமமகிலவிலக்ஷணமாத் ..............*
தோற்றுஞ்சாட்சாத்காரம்வரிற்-சுத்தப்பிரமத்தன்னியமாய் .........*

சாற்றற்கொன் றுமிலைபிரமந்-தன்னில்வேறுச்சகந்தோன்றில் ......*
நீத்தமொத்தகானலிலே-நீர்போன்மித்யாதோற்றரவே... .........*

(இ-ள்) ஆத்மஞானமிலாவிடத்தே - பிரமக்கியானமில்லாத போது, பிரமமகிலவிலக்ஷணமாத்தோற்றும் - பிரமமானது பிரபஞ்சத்திற்கு வேருகத்தோன்றும்; சாட்சாத்காரம்வரில் - அனுபவமான சாட்சாத்காரம் வரும்போது, சுத்தப்பிரமத்தன்னியமாய் - சுத்தப்பிரம சுவரூபத்திற்குவேருக, சாற்றற்கொன்றுமிலை - எவ்வளவும் சொல்லுதற்குவேறொன்றுமிலை, பிரமந்தன்னில்வேறுச்சகந்தோன்றில் - பிரமத்தைவிடவேருகச்சகந்தோன்றுமாகில், நீத்தமொத்தகானலிலே - வெள்ளம்போன்றகானலிலே; நீர்போன்மித்யா தோற்றரவே-சலம்போல பொய்த்தோற்றமேயாம். எ-று. (தா-ம்) உள்ளபடிவிசாரிக்குமிடத்து சர்வமும்பிரமசுவரூபமே-ஆகிலும் சகத்துவேருகத் தோற்றும்போது-பிரமம் சகத்துக்குவேருயிருக்கும்-பிரமசாட்சாத்காரம்வந்தபோது-பிரமத்தைவிடவேறொன்றுமில்லையாம்-பிரமாபரோட்சமுள்ளவர்களுக்கு - ஒருக்கால் வெருய்த்தோன்றினுலும் அதுகானல்நீர்போல்பொய்யாகுமென்றுணர்த்தியது. (சுரு)

---

(அ-கை) பின்னும் அந்தசுவரூபத்தை நிரூபிக்கின்ருர்.

யாதுகாணப்படுகின்ற - யாதுகேட்கப்படுகின்ற... ..............*
யாதும்பிரமசொரூபமலா- லன்யமாகமாட்டாதே ..................*
யாதுவிஷயங்களுந்தத்வ-ஞானத்தாலேசிதானந்த ... ..................*
எதுவாமத்வயப்பிரம வியல்பா மெதார்த்தமாகவே..................*

(இ-ள்) யாதுகாணப்படுகின்ற - யாதுவிஷயங்காணப்படுகின்றதோ, யாதுகேட்கப்படுகின்ற- யாதுவிஷயங்கேட்கப்படுகின்றதோ, யாதும்பிரமசொரூபமலால்-யாதும்பிரமசொரூபமேயல்லாமல், அன்னியமாகமாட்டா-வேருகமாட்டாது, யாதுவிஷயங்களும் - எந்தவிஷயங்களும், தத்வஞானத்தாலே-உண்மையறிவினுல், சிதானந்தயேதுவாம்- சச்சிதானந்தசுவரூபமாயும், அத்வயம் - இரண்டற்றதாயும் (இருக்கின்ற) பிரமவியல்பாமெதார்த்தமாக-உண்மையாகபிரமசாக்ஷாத்காரமாம். எ-று. வ-ம். ஈ-லசு. தா-ம். காண்பதுகேட்பதுமுதலா

னசகலேந்திரியவிஷயங்களும்-உண்மையறிந்துபார்க்குமிடத்து, சச்சிதானந்தாத்வயமான பிரமசுவரூபமாகவே விளங்குமென் றுணர்த்தியது; (௬ ௪)

---

(அ-கை) ஆத்மசுவரூபத்தை தக்கண்ணாற்காணக்கூடாது காதாற் கேட்ககூடாதென்றபடியால் ஓரிந்திரியங்களுக்கும் விஷயமாகாதே ன்று சுருதியிற்சொல்லுதலால் அதை யெந்தக்கண்ணா லறியலாமென்னில், உத்தரம்,

ஞானநோக்குடையோன் சச்சிதானந்தவான்மாவெங்குந் ........*
தானிறைந்துளதுகாணுந் தக்கஞானக்கணில்லோன் ..............*
வானுறுகதிரைக்காண வகையில்சென்மாந்தகன்போல் ...........*
ஊனுடன் முதலவெங்கு மொளிருமப்பொருள்காணனே .........*

(இ-ள்) ஞானநோக்குடையோன்-ஞானக்கண்ணுள்ளவன், சச்சிதானந்தவான்மா - சத்துச்சித்தானந்தமான பிரமம், எங்குந்தானிறைந்துளதுகாணும் தானெங்கும்பூரணமாயிருப்பதைக்காண்பான், தக்கஞானக்கணில்லோன் - மேலான - ஞானநோக்க மில்லாதவன் வானுறு கதிரைக்காண - ஆகாயத்திற்றோன்றுஞ் சூரியனைக்காண, வகையில் - சென்மாந்தகன்போல-ஏதுவில்லாத பிறவிக்குருடனைப் போல, ஊனுடன் முதலவெல்லாம் - ஸ்தூலதேகமுதலிய வெல்லாவற்றிலும், ஒளிருமப்பொருள்காணனே - பிரகாசிக்கின்ற அந்தமெய்ப்பொருளைக்காணமாட்டான். எ-று. (தா-ம்) ஞானக்கண்ணுடையோர்க்கே ஆத்மசுவரூபம் விளங்கும் அஃதில்லாத அஞ்ஞானிகளுக்குத் தோன்றாதென் றுணர்த்தியது. (௬ ௫)

---

(அ-கை) சொல்லிப்போந்தவாறு சுவானுபவங்கிடைத்தவருக்கும் ஒருக்கால் அனாத்மவாசனைதோன்றாமல் சிரவணமனனநிதித்தியாசனஞ்செய்து வருதலால்பூரணசித்தியுண்டாமென்கின்றார்.

சிரவணமனனநிதித்தியாசனமுஞ்-சிறந்திடப்புரிந்துநன்றுகத் ...*
திரமுறக்கனன் றஞானவாரழலாற்-சிதாபாசன்சுவர்ணம்போலுருகிப்

புனையுறுமலமாங்கருமசமகன்று புனிதமாமுத்தனுய்த்தானே......*
வரசமாதியிற்சாட்சாத்காரமருவி வயங்குறும்பூரணமாக............*

(இ-ள்) சிரவணமனன நிதித்தியாசனமும்-கேட்டல்- தெளிதல் சிந்தித்தலென்னுமிவை, சிறந்திடப்புரிந்துநன்குக. நன்குசிறப்பாகச்செய்வதனுல், திறமுறக்கனன்ற ஞானவாசழலால்-நிலையாய்ச்சொலிக்கின்றஞானக்கினியால், சிதாபாசன் சுவர்ணம்போலுருகி-ஜீவாத்மா பொன்போலுருகி, புனையுறுமலமாம் குற்றமுள்ளமும்மலங்களாகிய கருமசமகன்று-கல்மஷநீக்கி, புனிதமாமுத்தனுய்த்தானே-தான்சுத்தமுத்தனுகி, வரசமாதியில்-மேலானசமாதியடைந்து, சாட்சாத்காரமருவி-சாட்சாத்காரம்பெற்று, வயங்குறும்பூரணமாக - பரிபூரணசுவரூபமாய்விளங்குவன். எ-று. (தா-ம்)சிரவணுதிகள்செய்து-வருதலால் ஞானக்னி சொலிக்கும் - அதனுல்மும்மலநீங்கி புடம்வைத்தபொன் போலஆத்மா பிரகாசிக்குமென்றுணர்த்தியது. சுக

---

(அ-கை) இவ்வாறுவிசாரித்துணர்ந்த - ஜீவாத்மாவேபரமாத்மாவாகப் பாவித்துஇர்தயாகாசத்திலசூரியனைப்போலவிளங்குவனென்கின்றார்.

இதயாம்பரத்திலுதித்தொளிருமிணையிலாத்மபோதமெனும்......*
உதயாதவனக்கியான விருளொழியத்துரந்துவியாபித்து...........*
திதமாயெங்கும்பரிபுரண சித்தாய்ச்சருவதாரியாய் ...............*
முதமாய்ப்பிரகாசித்தகிலசகமுற்றுந் தானுய்விளங்குமதே........*

(இ-ள்) இதயாம்பரத்தில்- இர்தயாகாயத்தில், உதித்தொளிரும்- உதயமாய்விளக்குகின்ற, இணையிலாத்மபோதமெனும் - ஒப்பற்ற ஆத்மபோதமென்றுசொல்லும், உதயாதவன்- இளஞ்சூரியன், அக்கியானவிருளொழிய-அஞ்ஞானந்தகாரநீங்க, துரந்து-ஓட்டி, வியாபித்து-வியாபகமாய், திதமாயெங்கும்-எவ்விடத்துநிலையாய்,பரிபுரண சித்தாய்-பரிபூரணஞானமயமாய், சர்வதாரியாய் - சர்வத்தையுந்தரித்துக்கொண்டு, முதமாய்ப்பிரகாசித்து-ஆனந்தமாயிலங்கி, முற்றுந் தானுய்விளங்குமதே-எல்லாந்தானுகவேபிரகாசிக்கும். எ-று. (தா-ம்) ஆகாயத்திலுதித்தசூரியன் இருளைப்போக்கிஎங்கும் வியாபித்துபிரகாசிப்பதுபோல, ஆத்மபோதமும் இருதயாகாயத்திலுதித்து-அஞ்ஞானந்தகாரத்தைப்போக்கி, சர்வ்வியாபகமா

ய் - அவ்வியக்த்சாக்ஷி ஸ்தூலபரியந்தமான சமஸ்தகற்பனைகளுக்கும். அதிஷ்டானமாய்விளங்கிக்கொண்டிருக்கிறதும். அந்தப்பிரகாசத்தால் - எல்லாப்பிரபஞ்சமும் பிரகாசிக்குமென் றுணர்த்தியது. (௬௭)

---

(அ-கை) சொல்லப்பட்ட சிரவணாதிபரிபாகத்தினால் - ஆச்மா..! மோக்ஷ ஞானம்வருவதற்கு பிரதிபந்தங்களானபாபங்களை நிவர்த்திசெய்யும்பொருட்டு, கங்காதிபுண்ணியதீர்த்தஸ்நானஞ் செய்யவேண்டுமோவெனின் - ஆத்மதீர்த்தஸ்நானஞ் செய்பவருக்குயாதொருசிரமமுமின்றிக்கைவல்யசித்தியா மென்கின்றார்.

நித்யசுகந்தந்தமலமதாய் நிறைந்தெப்போதுநிரஞ்சனமாஞ் ...*
சுத்தவாத்மதீர்த்தத்தைத் தோய்ந்தோன் கிரியையெலாம்விடுத்து *
வைத்ததிசை தேசங்காலமருவுமபேக்ஷைவேண்டாமே ........*
முத்தனாய்ச்சர்வஞ்ஞனாய் முழுதும்வியாபித்திலங்குவனே .....*

இ-ள். நித்யசுகந்தந்து - நித்தியானந்தத்தைக்கொடுத்து, அமலமதாய் நிர்மலமாகி, நிறைந்து பூரணமாகி, எப்போதும், நிரஞ்சனமாய்-களங்கமற்றதாயிருக்கின்ற, சுத்த ஆத்மதீர்த்தத்தைத்தோய்ந்தோன்-பரிசுத்தமான ஆத்மதீர்த்தத்தை ஸ்நானஞ்செய்தவன் (சுவாநுபவம்பெற்றவனென்றபடி) கிரியையெலாம்விடுத்து காமியகன்மங்களெல்லாம்விட்டு, வைத்ததிசைதேசங்காலம்-விசேஷமாகச்சொல்லப்பட்ட. திக்கு.ஸ்தலம்புண்ணியகாலம், மருவுமபேக்ஷைவேண்டாமே தேடிச் சரிதைகிரியைகள் செய்யாமலே, முத்தனாய்ச்-சர்வஞ்ஞனாய் சீவன்முத்தனாகிசகலமும் வியாபித்துணர்ந்தவனாகி, இலங்குவன் பிரகாசிப்பான். எ-று. எ-ம். ஈ-கை. (தா-ம்) திக்குதேசகாலாதிகளையபேக்ஷிப்பானின்றும் பரிச்சின்னமாயும், தேகசிரமத்தைக் கொடுப்பதாயும்அனித்தியமான சொர்க்காதிபோகத்தைகொடுப்பதாயுமிருக்கின்ற சரிதை கிரியைகளைச்செய்துவருந்தாமல் ஆத்மதீர்த்தஸ்நானஞ் செய்தவனுக்குயாதொருசிரமமுமின்றிநித்தியானந்தசுகத்தைக்கொடுக்குமென்றுணர்த்தியது. (௬௮)

ஆத்மபோதம் சம்பூரணம்.

திருச்சிற்றம்பலம்.

---

# ஆத்மபோதவ்க்ராதி


| | பக்கம். | கவி. |
|---|---|---|
| அகண்டானந்த ...... | ௬௬ | ௫௮ |
| அகிலாதார ........ | ௮ | ௮ |
| அதத்துவா விருத்தி ... | ௬௪ | ௫௭ |
| அந்தக்கரணதரும ...... | ௨௧ | ௨௩ |
| அரிதாம்பொரு ...... | ௪ | ௯ |
| அருக்கநிற்பிரகாச ...... | ௨௨ | ௨௪ |
| அருளேஞெயத்தால் ... | ௪௨ | ௪௩ |
| அவித்தைகற்பிக்கு ... | ௩௧ | ௩௧ |
| அவித்தையிற்கலங்கு ... | ௫ | ௫ |
| அணுதியனீர்வா ........ | ௧௩ | ௧௪ |
| அன்னமயமாந் ........ | ௧௫ | ௧௯ |
| ஆதியாம்பரமர் ........ | ௧ | ௧ |
| ஆத்மஞானமிலா ...... | ௬௮ | ௯௩ |
| ஆகாயம்போல ........ | ௩௬ | ௩௫ |
| ஆன்மசைதன்னிய தேக | ௧௮ | ௨௰ |
| ஆன்மசிற்சொரூப ... | ௨௪ | ௨௧ |
| ஆன்ம மெய்ப்பொருள் | ௩௯ | ௩௯ |
| ஆன்மபோத வாணி ... | ௪௧ | ௪௨ |
| ஆன்மசைதன்னியத்தை | ௬௯ | ௬௯ |
| இந்தச்சருவசெகத்...... | ௪௭ | ௪௮ |
| இசைத்திடும் யோகி ... | ௪௯ | ௬௪ |
| இணையிலப்பரமரூ...... | ௫௭ | ௯௰ |
| இதையாம்பரத்தி ...... | ௯௪ | ௫௭ |
| உலகுயிர்பாத்தி........ | ௩ | ௬ |
| உணர்தறிவிலாதார் ...... | ௧௮ | ௧௯ |
| எந்தலாபத்தின்மிக்க ... | ௫௨ | ௬௪ |
| எப்பொருட் பிரகாச ... | ௫௭ | ௯௧ |
| ஏகாந்தத்தலத்திரு ...... | ௩௮ | ௩௮ |
| கன்மமஞ்ஞானந் ...... | ௩ | ௩ |
| கடமடமுதலா ........ | ௧0 | ௧0 |
| கடாதிபலபொருளை ... | ௨௭ | ௨௯ |
| சமயிகள்கன்ம ... | ௪ | ௭ |
| சத்தியஞானானந்த... | ௯ | ௯ |
| சச்சிதான்மா........ | ௨௩ | ௨௬ |
| சருவசாட்சியாகு ... | ௩௪ | ௩௩ |
| சந்ததம்பிரத்திய ... | ௪௩ | ௪௩ |
| சிரவணமனன ...... | ௯௰ | ௯௩ |
| சீவன்முத்தமுனி ... | ௬௰ | ௬௨ |
| சுருதி மிருதிபுராண | ௧ | ௨ |
| சுத்தியிலிரசிதம ... | ௭ | ௭ |
| சுத்தமானபடிகந் ... | ௧௪ | ௧௬ |
| சொப்பனம்போல | ௯ | ௯ |
| ஞாதுருஞானஞேய | ௪௰ | ௪௧ |
| ஞானநோக்குடை... | ௯௰ | ௯௬ |
| கலகசால்சங்க ...... | ௩ | ௪ |
| தத்துவவைக்ய ...... | ௪௬ | ௪௯ |
| தபோபலமதஞற் ... | ௧ | ௧ |
| தாணுவிற்புரு ...... | ௪௪ | ௪௬ |
| தீபத்தை விளக்க ... | ௨௮ | ௨௯ |
| தேகமிந்திரிய ...... | ௧௭ | ௧௮ |
| தேகத்துக்கன்ய ... | ௩௨ | ௩௨ |
| தேசீர்ந்தவிஞ்ஞா ... | ௪௯ | ௪௭ |
| தேசவுபாதிநீங்குதல் | ௬௧ | ௬௩ |
| தோயத்தில்ரச ...... | ௧௪ | ௧௧ |
| நாமரூபங்களா ...... | ௪௰ | ௪௰ |
| நித்தசுகந்தந்........ | ௯௬ | ௯௮ |
| நித்தியசுத்த ........ | ௩௯ | ௩௯ |
| நிரந்தரம்பிரமமே ... | ௩௭ | ௩௭ |
| நிரந்தரம் பிரத்தி ... | ௪௯ | ௧௪ |
| நேதிநேதிவாக ...... | ௨௯ | ௩௰ |
| பரவியவான்மா ...... | ௪ | ௪ |
| பிரமசொரூபம்...... | ௬௮ | ௯௨ |

## ஆத்மபோதவகராதி.


| | பக்கம். | கவி. | | பக்கம். | கவி. |
|---|---|---|---|---|---|
| பூருவவுபாதி .......... | ௪௭ | ௪௯ | மோகவாரிதியை ...... | ௪௮ | ௫௰ |
| பொருந்துபஞ்சி ...... | ௧௧ | ௧௨ | யாதுகாணப்படு ...... | ௫௯ | ௯௪ |
| போதமொன் றல்லான் | ௨ | ௨ | யாதொன்றை ......... | ௫௫ | ௫௫ |
| போகசாதனமா....... | ௧௨ | ௧௫ | வஞ்சப்பழுதை......... | ௨௫ | ௨௭ |
| மனமெனக்கிலாமை ... | ௫௫ | ௫௫ | விவேகமில்லா ......... | ௧௯ | ௨௧ |
| மானசோபாதி ......... | ௨௰ | ௨௨ | வேதாந்தப்பொரு...... | ௨ | ௫ |
| மேலுக்கீழுமிடை...... | ௫௫ | ௫௯ | | | |


ஆத்மபோதவகராதி - முற்றிற்று.

---

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪ | ௨௬ | வெவ்வேரான. | வெவ்வேறான |
| ௬ | ௧௮ | சொப்பனம் | சொற்பனம் |
| ௯ | ௨௦ | நாநாவித | நானாவித |
| ௪௬ | ௧௬ | தமமூட்டிகழ் | தமமுட்டிகழ் |
| ௧௯ | ௨௫ | ஆத்மானாத்ம | ஆத்மஅனாத்ம |
| ௨௰ | ௨௧ | சர்த்ருத்வமாதி | சர்த்தத்வமாதி |
| ௨௮ | ௨௫ | விளக்கிக்கொண்டு | விளங்கிக்கொண்டு |
| ௫௪ | ௯ | மனா. | மலற. |
| ௫௭ | ௧௫ | காலதிரயத்திலும் | காலத்திரயத்திலும் |
| ௪௫ | ௨௪ | திக்பரமமானது | திக்பிரமமானது |
| ௫௨ | ௨ | உறும் | தள்ளுபடி |
| | ௨௪ | பிரமலாபம் | பரமலாபம் |

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

வாக்கியசுதையென்னும்

# திர்க்குதிரிசியவிவேகம்.

## மூலமும் - உரையும்.

தக்ஷிணாமூர்த்தியஷ்டகம்.

சுகாஷ்டகம்.

சிவோகபஞ்சகம்.

மநீஷாபஞ்சகம்.

மோக்ஷசாதனபஞ்சகம்.

அம்பலவாணர் தோத்திரபஞ்சகம்.

சிதம்பரதோத்திரம்.

இவை,

சிவனடியார்கள்விருப்பப்படி

**சிவானந்தமூர்த்தி**

வடமொழியினின்று மொழிபெயர்த்து

தமிழ்க்கவிதை பாடியருளியது.

அ. இரத்நசபாபதிமுதலியாரால்

சித்தாந்த சைவப்பிரகாச இயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

முதற்பதிப்பு.

கலியுகாதிஸு -சகூளரு- ஸ்ரீமுகஸு ஆனிமீ.

இதன்விலே அணா அ.

# சிறப்புப்பாயிரம்

அச்சிறுபாக்கம் - ஆட்சீசர்திருவடித்தொண்டர்

## பழனிசுவாமிகள்

அருளியது.

தெய்வப்புலமைத் திருவள்ளுவனூர்; அறம்பொருளின்பம் வீடெ னுநான்கின், திறமுணர்ந்துலகஞ் செந்நெறியொழுக, சுருதிமிருதி துல ங்குமாறங்கம், ஆதியமுதுநூ லனைத்துமாராய்ந்திங், குலகுபகார மொ ருநூல்பெருநூல், செவ்வியதமிழிற் றிகழ்தரவிளங்க, எம்மொழியோ ருமெம்மதத்தவரும், சம்மதமென்னத் தலைமேற்கொள்ள, நிலநிறைபுற விருணீக்கியெப்பொருளும், இலகுறவிளக்கு மேகவான்கதிர்போல், உள்ளிருணீக்கு மொருமுதுகதிரென, தெள்ளியதிருக்குறள் செய்தொ ன்றிருக்க, செந்தமிழ்ப்புலமைச் சிவானந்தமூர்த்தி, இந்துசேகர னிணை யிலாவருள்கொடு, சங்கரமாமுனி சாத்துமத்வைத, அத்தியாத்துமநூ லனைத்துநன்கோர்ந்து, வீட்டுநெறியை விரிவுறவிளக்க, ஆத்துமபோத மணிதிகழ்வாக்கிய, சுதையாந்திர்க்கு திரிசியவிவேகம், தக்ஷிணாமூர்த்தி தனைத்துதியஷ்டகம், சுகப்பிரமம்புகல் சுவாநுபவாஷ்டகம், தேகோகஙீ க்குஞ் சிவோகபஞ்சகம், மோக்ஷசாதன முனைத்திடுபஞ்சகம், வருணாச் சிரம வண்மையேவாய்மைப், பொருணூட்டந்தரப் போதாதென்று, சங் கரன்சங்கரற் கருளியதகைசால், துங்கசம்வாதத் துதிகெழுபஞ்சகம், வாசிட்டசார மனைத்துநன்கோர்ந்து, பேசிட்டவான்மீ கப்பெருமுனி வன், வழிபடுபரத்து வாசமாமுனிக்கு, அழிதருபிறவிநோ யகன்றிடப் புகன்ற, சருக்கமிரண்டுந் தமிழிற்றிகழ, இங்கிவைசாத்திர மேனையதோ த்திரம், சாற்றிடப்பெற்ற தகமையேதென்னில், அறமுதன்முப்பா ல ருளியநாயனூர், திரமிகுவீட்டியல் செப்பற்குரித்தன், றேதெனிலுல கத் தியனெறியுரைத்தோர், தீதெனவிடுக்குஞ் செந்நெறியுரைத்தல், பேதமாமென்னப் பெரிதுநன்குணர்ந்தோர், ஆதலினறத்தின் காரண வழியில், போதச்சுருக்கிப் புகன்றனர்துறவறம், அதனால், மானிடப்பி றவியின் வருந்தியும்வேண்டுவ, தானுடைப்பிறவி யொழித்திடலாதலின், நிட்காமியதவ நெடுநாட்புரிந்து, தக்கசாதன சதுஷ்டயமடைந்தோர், மிக்கசுருதியும் விரிந்தபல்கலைகளும், நெடிதாராய்ந்தவை நிகழ்த்துபல் பொருளும், முடிவுறக்கூட்டி முறைபுணர்ந்திடுதல், அருமையென்றள

வி லவையாராய்ந்தே, உரிமையினெடுங்கா லோர்ந்தநுபவத்தால், அள விடற்கரிய வகநிலப்பரப்பை, உளனுறக்கொண்டிங் கொருபடத்தமை த்த, பூகோளந்தெரி புலமையனென்ன, ஊகத்துயர்வொப்பிலா தவப்பி ரபந்தம். பலவெடுத்துலகம் பயன்பெறவளித்தல், புலமையச்சிவானந் த போதற்குரித்தாம், இணையிலிப்பெருங்கொடைக் கேதுகைமாறெனி ல், குணநிறையுப சாந்தங்கூடி, தணவில்சச்சிதானந் தஞ்சமைதரலே.

—*—

இந்நூலாசிரியர்க்காசிரியர் இலக்கணவித்துவான்

## பு. க. சுப்பராயமுதலியார்

### கூறியது.

அரும்பெறன்ஞான சாத்திரமிவற்றை யாய்ந்துணர்சிவானந்தமூர்த்தி
பெருந்தவப்பயனுற் றமிழ்மொழிக்கமையாப் பெருமைசார்ந்திடக்கவிபுகன்முர்
தருந்தருவளிக்கத் தருமகாதேவி தாள்பணிமானதபூஜை
திருந்துறப்புரிந்து புகன்றபேறென்றே செப்பலாஞ்செம்பொருளுணர்ந்தீர்

## நூலாசிரியர்.

இச் சாஸ்திரங்களை வடமொழியினின்று மொழிபெயர்த்துத்
தமிழ்க்கவிதை பாடினமைகூறியது.

உலகநீள்வடிவை யொருபடத்தமைத்திங்-கூன்கணுக்கொருங்குகாட்டுதல்போல்
நிலமிசைச்சிறந்த கலைமுழுதுணர்ந்த-நெடும்புகழ்ச்சங்கரமுனிவன்
புலமிகுமரபில் வித்தியாரண்யப்-போதகனெடுத்தினிதுரைத்த
நலமலிதிர்க்கு திரிசியவிவேக-நன்மணிதமிழ்மொழிக்கணிவாம்.

வேதவேதாங்கவிரிவெலாந்தொகுத்து-வியாதன்முன்புகன்றசூத்திரங்கள்
போதமாம்பொருட்டுப் பாஷியம்விரித்துப்-புகன்றருள்சங்கரர்தாமே
பேதமில்சுவாநுபூதியைவிளக்கப்-பேசியவஷ்டகமுத்தி
சாதனஞ்சோபா னம்மநீஷாபஞ்-சகமணிதமிழ்மொழிக்கணிவாம்.

இத்தகுசிந்தா மணிகள்பெற்றவருக்-கெய்தரிதிலையிவைக்குரியோர்
உத்தமர்முன்னஞ் செய்தவப்பயனு-லொண்பொருட்பாக்கியமடைவார்
சித்தசுத்தியினுற் சத்யசங்கற்பச்-செல்வராமிவர்தமைச்சார்ந்து
பத்திசெய்பவருஞ் சதானந்தச்செல்வம்-படைத்தினிதளிப்பர்மற்றையர்க்கும்

ஸ்ரீ குருப்பியோ ன் நம:

திருச்சிற்றம்பலம்.

—*—

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

வாக்கியசுதையென்னுந்

# திர்க்குதிரிசியவிவேகம்

## மூலமும் — உரையும்

### விநாயகர் துதி.

இருக்காதிநான்மறையி னியற்பொருளைபுணராமே ... ... ... *
மருக்கோலமலரடிகள் வழுத்தும்வழித்தொண்டனிவன் ... ... *
ஒருக்காலேமுத்திபெறற் குரியானென்றுள்மன்னி ..... ... *
திருக்கோடுதிரிசியமுந் தேற்றினர்விநாயகரே..... ... .... ... *

### முகவுரை.

இவ்வுலகத்தில் சமுசாரதாபத்திரயத்தினுல் மநம்வருந்திய ஒருவன் பிரமாதி சகலலோகங்களும் கர்மாநுகுணமாகக் கிடைப்பதால் அநித்தியமென்றறிந்து துக்கமற்ற, முத்திசுகத்திற் கேதுவான பிரமஞாநத்தை யடைய விரும்பி மிகவுந் தயையுள்ளவராய் வேதமுணர்ந்த பிரமநிஷ்டரான சற்குருவையடைந்து சுவாமி! ஆத்மசுகத்திற்குத் தடையாய் சுகம்போலத்தோற்றும் பலவித சமுசாரதாபத்திரயங்களினும் அவற்றிற்கேதுவான அஞ்ஞாநத்தினுலும் வருந்துகின்ற அடியேனுக்குஆத்மா அநாத்மா இன்னதென்றுணரும் விவேகத்தை நன்ருய் அருள்செய்ய வேண்டுமென்று, சவிஸ்தாரமாய் வினவ மிகவுந் தயையுள்ள குருமூர்த்தியானவர் வாக்கியசுதையென்னும் திர்க்கு திரிசியவிவேகமான வேதாந்தசாஸ்திரத்தை உபதேசிக்கத் தொடங்குகின்றார்.

அவதாரிகை.

முதலில் சிஷ்யனுடையபுத்தியை பரிக்ஷைசெய்யும்பொருட்டுச் சுருக்கமாக ஆத்மா இன்னதென்றும், அநாத்மா இன்னதென்றும், கூறுகின்றார்.

திரிசியமானசர்வஞ் செறியநாத்மாவேயாகும்... ... ... ... ... *
அரியதோர்திர்க்கேயாத்மா வவிகாரியென்னலாகும் ... ... *
பெரிதாத்மாநாத்மவிந்தப் பிரிவுணர்விவேகந்தானே ... ... ... *
விரிதருங்கிரந்தகோடி விளம்பும்வேதாந்தமாக ... ... ... ... *

இதன்பொருள்.

தோற்றப்படுகின்ற சமஸ்தஜகத்தும், விரிந்திருக்கின்ற அநாத்மாவாகும் அரிதாயிருக்கின்ற திர்க்கு சுவரூபமே ஆத்மாவாகும், விகாரமற்றதென்று சொல்லப்படும், விசேஷமான ஆத்மா - அநாத்மாவினது பேதமறிகின்ற விவேகத்தைத் தான் வேதாந்தஞானமென்று, விரிவான அநேகசாஸ்திரங் கள்கூறும்—என்றவாறு.

வினா! இங்ஙனங்கூறியதிற் சந்தேகங்கொண்டு சிஷியன் கேட்கின்றான், சுவாமி? ஜராமரணமுள்ளதாயும் திரிசிய சுபாவமாயுமிருப்பதால்-தேகம் அநாத்மாவென்பது, சரியே; ஆயினும் பார்க்கிறான், கேழ்க்கிறான், முகருகிறான், உருசிக்கிறான், அறிகிறான், போகிறான்; செய்கிறான், பேசுகிறான், விடுகிறான், என்றிவ்வித சேதனத்தருமங்களோடு கூடிய இந்தச்சரீரம் ஆத்மாபோலவேதோற்றுகின்றதால் அந்தஆத்மவிஷயத்தில் முன்போலவே சந்தேகமிருக்கின்றது ஆகையால் நன்றாயுணரும்படி போதிக்கவேண்டுமென்று வினவ சிஷயன் கருத்தையறிந்து ஆசாரியர்—(விடை) * ஸ்தூலாருந்ததி நியாயத்தினுல் (முதலில் ஸ்தூலரூபமாய் ஆரோபிதமான திரிசியங்களை ஆத்மாவாகக் காண்பித்துக் கிரமத்தில் வேறுபாடான அநாத்மாவாகப் பிரித்துத்தள்ளிவிட்டு சூக்கும திர்க்குசோரூபமான ஆத்மாவை விளக்கவேண்டி * (ஒருபொருளைச்சுட்டி அருந்ததிகாட்டல்.) (க)

அ-கை.- இங்ஙனம் நான்குகவிதைகளால் உருவம்-கண் - மனம் - புத்திமுதலானவற்றை ஆத்மாவாகக்காண்பித்து நீக்கிப்பின் சுத்தமான பரமாத்மாவைத் தரிசிப்பிக்கின்றார்.

உருவமேதிர்சியமாகு முலோசநந்திருக்காமங்ஙன் ... .... ... *
வருமதுதிர்சியமாகு மநந்திருக்கெனலாம்புந்தி... ... ... ... *
தருசித்தமகந்திர்சியந்தான் சாட்சியேசத்தாய்நீங்காப்... ... ... *
பொருவருந்திருக்காமென்றும் புகல்திர்சியமாகாவொன்றே. ... *

இ-ள். தோற்றப்பட்ட பொருள்யாவும், திருஷ்டிவிஷயமான அநாத்மாவாகும் கண்ணனது, திர்க்கான ஆத்மாவாக வுபசரிக்கப்படும் அத்தன்மையவான்கண்ணும் திர்சியமான அநாத்மாவாகும், மநமானது ஆத்மாவென்று சொல்லப்படும், அந்தமநம் புத்தி சித்தம் அகங்காரமுதலிய அந்தக்கரணங்களும், காணப்பட்ட அநாத்மாவேயாகும், சாக்ஷியானபிரத்தியகாத்மாவே ஒப்பற்ற திர்க்குசொரூபமாய் என்றும் திர்சியமாகாத பரம்பொருளாம்—எ-று. (தா-ம்.)—கண்ணிற்கு உருப்பட்டுத் தோன்றும் சடவஸ்துவெல்லாம் திரிசியமென்றது. சடவஸ்துக்களைக் கண்டறியுங்கண் திர்க்காயிருப்பதால் ஆத்மாவென்று பாவித்தது, அதுவும் மனதுக்கு திரிசியமானதால் அநாத்மாவாயிற்று அதைநோக்கி மநந் திருக்காயிருப்பதால் ஆத்மாவென்று பாவித்தது அதுவும் சாட்சிக்குத் திரிசியமானதால் அநாத்மாவாயிற்று, மநதை புத்திமுதலிய விருத்தியென்று பாஷியகாரர் சொல்லியிருக்கிறார். ஆதலால் மனம் புத்தி சித்தம்அகங்காரம் என்னும் அந்தக்

கரணவிருத்திகளெல்லாம் சாட்சியாலறியப்படுகின்றமையால் அவையெல்லாம் அநாத்மாவேயாம்; பிரத்தியகாத்மாமாத்திரம் திரக்குசொரூபமாகவிருந்து திரிசியமாகாதிருப்பதால் ஆத்மாவென்பதுசித்தம். (௨)

அ-கை. இங்ஙனம் பிரத்தியகாத்மாவை பரமாத்மாவென்று நன்றாயறியும்பொருட்டுச் சொல்லிய அர்த்தத்தையே விஸ்தரித்துச்சொல்லுகிறார்.

செறியுநீலபீதமுடன் றிகழுந்தூலசூக்குமமும் ... ... ... *
குறியநெடியவென்பலவாக் கூறுமுருவபேதங்கள் ... ... ... *
அறியும்விஷயத்துலோசனமொன் றாகிநிற்குமதுபோல ... *
நெறிசேர்மற்றைப்புலநான்கு நேரோயுணருந்தமபேதம். ... ... *

இ-ள். சேர்ந்திருக்கின்ற நீலநிறம் பொன்னிறமுதலியவும், விளங்கும்பெருமை சிறுமையும், குறியது நெடியதென்று பலவாகச் சொல்லாநின்ற உருவபேதங்களை பார்த்தறிவதில், நேத்திரம் ஒருதன்மையாகவேயிருக்கும், அதைப்போல முறையே யுள்ளமேல்நான்கிந்திரியங்களும், தத்தம்விஷயபேதங்களையிவ்வாறேயுணரும்—எ-று. (தா-ம்.)—உருபவஸ்து ஒன்றாகவிருந்தும் நீலபீதாதி பேதத்தினால் பலவேறுபாடடைந்தது. அப்பேதங்களை கண்ணொருதன்மையாகஆத்மாவைப்போலறிகின்றது. ஆனால் அக்கண்முதலிய இந்திரியங்கள் மநதினால் அறியப்படுகின்றமையால் அவை ஆத்மாவல்லவென்றுணர்த்தியது. (௩)

அ-கை. நேத்திரமுதலிய இந்திரியங்கள் மநத்தால் அறியப்படுமென்பதைக் காண்பிக்கின்றார்.

அந்தகமந்தநன்றா யறிதருந்தன்மையாதி ... ... ... ... *
வந்துறுநேத்திரதர்ம வகையுணர்மனதொன்றாகிச் ... ... *
சிந்தனைபுரிந்துநிற்குஞ் செறிசுரோத்திரந்துவக்கு... ... ... *
சந்தநாவாக்கிராணத் தன்மையுமிங்ஙன்காண்மே ... ... ... *

இ-ள். முழுதுந் தெரியாமை கொஞ்சந்தெரியாமை நன்றாத்தெரியுந்தன்மைமுதலிய கண்ணுக்குண்டாந் தன்மைகளை பிரித்துணர்கின்ற மநதொன்றாய் ஆத்மாவைப்போலிருந்து பேதத்தன்மைகளைச் சிந்தித்துணரும், சேர்ந்தசெவி தொக்குசிறந்த நா மூக்கு இவைகளின் குணங்களையும் இவ்வாறே மநதறியும்—எ-று. (தா-ம்.)—கண் காது முதலான இந்திரியங்களது குருடு செவிடு முதலிய பேதங்களை மநதொருதன்மையாயிருந்தறிதலின் அதைநோக்கி ஆத்மாவைப்போலாமென்றுணர்த்தியது. (௪)

அ-கை. இங்ஙனம் மநதை ஆத்மாவாக வுபசரித்த கருத்தைமாற்றிக் கூறுகின்றார்.

காமஞ்சங்கற்பஞ் சந்தேகத்தொடுசிரத்தாசிரத்தை ... ... ... *
தாமுறுஞ்சிதோஷ்ணதி சகித்திடுந்தீராதிரம் ... ... ... ... *
ஏமுறுநாணம்பிரஞ்ஞை யிகல்பயமின்னவாய ... ... ... ... *
வாமநத்தருமமெல்லாஞ் சித்தொன்றேவயங்குவிக்கும். ... ... *

இ-ள். கிடையாதது வேண்டுமென்னுமிச்சை, சிந்தனை ஆத்மானாத்ம விஷயசம்சயமும், குருவினிடத்தில் வேதாந்தவாக்கிய சிரவணாதிகளில் விசுவாஸம் அஃதின்மை சுவதர்மாநுஷ்டானாதிகளிலும் சிரோஷ்ஞாதிகளிலும் சகிக்குந்தைரியம் அஃதின்மை நன்னடையிலிருப்பவனாக்கண்டு அங்ஙனம் நடவாதவன்வெட்கப்படுகை அறிவு மிருபயம் இவைமுதலான அவாவுகின்ற மநதின்றன்மை எல்லாம் ஞானசுவரூபமான பிரத்தியகாத்மா தானொரோதன்மையாயிருந்து பிரகாசிப்பிக்கும்—எ-று. (தா-ம்.)—மனங் காமாதி பலபேதத்தன்மையுள்ளதாய் ஆத்மாவினலறியப்படுகின்றமையால் அஃதுந் திரிசியமாமென்றும் பிரத்தியகாத்மாவே திர்க்காய் ஆத்மசொரூபமாமென்று முணர்த்தியது. காமாதிகள் மனோதருமமென்பதற்குச் சுருதியிருக்கின்றது. (ரு)

அ-கை. ஆத்மா ஷட்பாவவிகாரசூன்யனென்றும் சுயம்பிரகாசனென்றும் உணர்த்துகின்றார்

உதயாஸ்தமனமிலவிருத்தி யொடுக்கமாதியிலைசுவயமே ... ... *
திதமாப்பிரகாசித்தன் ரியமாந் தேகேந்தியங்கடமைத்தெரிய ... ...*
விதமாம்வேறுசாதனங்கள் வேண்டாமேதான்விளக்குவிக்கும் ... *
சதமாம்பிரத்திபகான்மாவின் றன்மையீதென்றுணர்வாயே ... ... *

இ-ள். ஒருபோதுண்டாகிறதும் நாசமடைகிறதுமில்லை, வளர்தல் குறைதல்முதலானவையுமில்லை, தானே ஸ்திரமாகவிளங்கி வேறான தேகம்இந்திரிய முதலானவற்றைத் தோன்றும்படி பிரிவான அன்னிய சகாயம் அபேட்சியாமல் தானே பிரகாசிப்பிக்கும்நித்தியமான பிரத்தியகாத்மாவினது தகைமை யிதுவென்றுணரக்கடவாய்—எ-று. (தா-ம்.) பிறத்தல் - இருத்தல் வளர்தல் வேறுபடல்குறைதல் அழிதல் என்று தேகாதிகளுக்குண்டான ஷட்பாவவிகாரங்களும் ஆத்மாவுக்கில்லையென்றுணர்த்தியது. மேலும் புத்திமுதலியனபோற் பராதீனப்பிரகாசமுள்ளதல்ல. சுவயம்பிரகாசமாயும், பரப்பிரகாசமாயு மிருக்குமென்று முணர்த்தியது. சாட்சியபேதைகூடியிஞல் புத்திக்குப் பிரகாசம், புத்தியிஞல்மநமுதலானவைக்குப்பிரகாசம், மநத்தால் இந்திரியாதிகளுக்குத் தத்தம்விஷயங்களிற் பிரகாசம், ஆத்மாவோவென்னில் நிர்விகாரமாயிருந்துகொண்டு சன்னிதானமாத்திரத்திஞல் புத்தியாதிகளைப்பிரகாசிப்பிக்குமென்று, வாக்கியவிருத்தியிற் கூறியிருக்கின்றது.

அ-கை. இங்ஙனம்-ஆத்மாநிர்விகாரியென்பதை ஸ்தாபித்து - மேல்-அநாதி அவித்தியாகாரியமாயுண்டான மகதத்துவத்திற்ரூன்றும் சிதாபாசனோடுகூடிய அஹங்காரத்திற்கே சகலமானசுகதுக்கங்களும் சாக்கிராதியவஸ்தைகளும் சநநமரணாதிகளுமென்று சாதிக்கும்பொருட்டு மஹதத்துவத்தில் உற்பத்திபேதத்தைக் கூறுகின்றார்

சிற்சாயாப்பிரவேசந்தன்னாற் றிகழ்புந்திவிளங்குமன்ன ... ... *
துற்றிடுமிரண்டதாக வொன்றகங்காரமொன்று... ... ... *
பற்றாந்தக்கரணமென்னப் படுமிதுபிராணதாது ... ... ... ...*
பெற்றிடுசெந்துவெல்லாம் பிறங்குகாரணமதாமே. ... ... ... *

இ-ள். சித்தினதுபிரதிபிம்பப்பிரவேசத்தினல், சத்வகுணத்தின்காரியமாய்ப் படிகம்போல நிர்மலமாகிய - மஹதத்வம் ஆத்மாவைப்போற்பிரகாசிக்கின்றது. அப்புந்தியோவென்னில்இரண்டுவகையாயிருக்கின்றது. ஒன்றுஅஹங்காரமாகும் மற்ருென்று, பொருந்தியஅந்தக்கரணமென்று சொல்லப்படும், இவ்வந்தக்கரணம், பிராணும்சம் பெற்றிருக்கின்றசகலசெந்துக்களும், விளங்கித் தரிப்பதற்குக் காரணமாய்நிற்கும்—எ-று. (தா-ம்.)—அஹங்காரம் - சாத்வீகமென்றும்-ராஜஸமென்றும்-தாமச மென்றும்மூன்றுவிதமாம், அவற்றில் -தாமசவஹங்காரத்தில்-பூதசிருட்டியும், ராஜஸஅஹங்காரத்தில் இந்திரியசிருட்டியும், சாத்வீக அகங்காரத்தில் மனுதி தேவசிருட்டியும் உண்டாயிற்றென்றறிக. அந்தக்கரணம் - பிராணனுள்ள சகலசெந்துக்களையும் தரிப்பதற்குமாத்திரங் காரணமென்றுணர்த்தியது. (எ)

அ-கை. சங்கை-ஆத்மா எங்குமுள்ளது - நிர்விகாரி- ஊசிக்காந்தம்போல-சன்னிதிமாத்திரத்தால் தேகேந்திரியாதி சடவஸ்துக்களை யறிவுள்ளதாகச் செய்யுமென்னில் சுவர் தூண்முதலானவையும் சடமாதலால் அவற்றை யேன் அறிவுள்ளனவாகச்செய்யவில்லையென்னுஞ் சங்கைக்குஉத்தரம்.

சிற்சாயையகங்கரந்தாஞ் சேருந்தப்தாயபிண்டப் ... ... ... *
பெற்றியாமென்னமுன்னூற் பேசுசம்மதமாமந்த... ... ... ... *
விற்பெறுமகங்காரத்தின் மேவுதாதான்மியத்தால் ... ... ... *
பற்றுறுதேகந்தானும் பகருஞ்சேதநமதாமே.... ... ... ... ... *

இ-ள். சிதாபாசனுக்கும், அகங்காரத்திற்கும், உண்டானசம்பந்தம் காய்ந்த விரும்புக்கட்டிபோலாமென்று, முதன்மையான சாஸ்த்திர சம்மதமாகும். அந்தப்பிரகாசமுடைய வகங்காரத்தினது பொருந்திய ஒருமையினல் சம்பந்தமானசரீரமும் மேற்கூறிய சேதனத்துவம்அடையும்—எ-று. (தா-ம்.)—சுவர்முதலானவைக்கு அந்தக்கரணமின்மையால் ஆத்மசம்யோகம் இருந்தும் சேதனத்துவமில்லை. ஆத்மாவுக்கு சங்கமின்மையால் ஒன்ருேடும் சம்யோகமுமில்லை, வியோகமுமில்லை, மேலும் அகங்காரத்தில் பிரதிபலித்த சிதாபாசனுல் பிராணிகளது சரீராதிகள் சேதனங்களாகும், பிராணவியோககாலத்தில் ஆத்மசம்பந்தமிருந்தும் தேகம் கட்டைபோல அசேதனமாயிருக்கின்றது. ஆகையால்-இந்தச்சங்கைக்கிடமில்லையென்றுணர்த்தியது. (அ)

அ-கை. அஞ்ஞானவசத்தால் அகங்காரத்திற்கு சிற்சாயாதி மூன்றினேடும் அமிக்கியமுண்டென்றுணர்த்துகின்ருர்.

சிற்சாயைதேகஞ்சாட்சி யிவையகங்கரஞ்சேர்ந்தொவ்வொன் ... ... *
றுற்றதாதான்மியத்தா லுணர்வனுன்றேகம்பிர்ம்மம்... ... ... *
இற்றெனுமயிக்யமான திசைதருஞ்சகஜமென்றும் ... ... *
பற்றியகன்மம்பிராந்தி யெனப்பகர்விதமூன்ருமே. ... ... ...*

இ-ள். சிதாபாசன்-தேகம்-சாட்சி இவைகளோடும், அகங்காரஞ் சேர்ந்து, தனித்தனி யுண்டான தாதான்மியத்தால், நானறிகிறேன், நான்தேகம், நான்பிர

மம், என்கின்ற இத்தன்மையான சேர்க்கையானது பொருந்திய சகஜதாதாத்மியமென்றும், பற்றுள்ள கர்ம்மஜ தாதாத்மியமென்றும், பிராந்திஜதாதாத்மியமென்றும், கூறும்வகை மூன்றும்—எ-று. (தா-ம்)—அகங்காரம் நிர்மலமானதால் சிதாபாசனுேடுகூடவேயுண்டாகின்றது. ஆகையால் - சிதாபாசனுேடுகூடி யுண்டாகுந்தாதாத்மியம் சகஜமாகும், தேகம் அகங்காரத்தாற் செய்யப்பட்ட கர்மத்தாலுண்டாகின்றமையால் கர்மஜமாகும். அசங்கனுகிய சாக்ஷிக்கு ஒன்ருேடுஞ் சங்கமின்மையால் பிராந்தி ஜந்நியமாகும் என்றுணர்த்தியது. (கூ)

அ-கை. அகங்காரத்தின் மூன்றுவிததாதான்மியமும் எப்போது நீங்குமென்னில் உத்தரம்.

சம்பந்தியுள்ளமட்டுஞ் சகஜந்தாநீக்கமில்லை... ... ... ... ... *
இம்பர்செய்கன்மநாசத் திரிதருங்கன்மஜந்தான் ... ... ... ...*
அம்பரஞானம்பெற்று லகன்றிடும்பிராந்திஜந்நியம் ... ... ... *
செம்பொருடானும்பிரம்ம கேவலசித்தியாமே. ... ... ... ...*

இ-ள். ஒன்ருேடொன்று சம்பந்தமுள்ள சிதாபாசனும், அகங்காரமும் இருக்குமளவும், சகஜதாதாத்மியம் நீங்குதலில்லை, இவ்வுலகிற்செய்தகன்மம் ஒழிந்தபோது, கர்ம்மஜதாதாத்மியம் நீங்கிவிடும், மேலானபிரமஞானமடைந்தால்,பிராந்திஜந்நியதாதாத்மியம்நீங்கிவிடும், உண்மைப்பொருளாகியபிரம்மகைவல்லியமுண்டாம்—எ-று. (தா-ம்)—சிதாபாசனுக்கும் அகங்காரத்திற்கும் உண்டான தாதாத்மியம் சுவபாவசித்தமானதால் அது ஒருபோதும் நீங்காது. மோக்ஷபரியந்த மிருக்கும். தேகத்தையுண்டாக்குங் கர்ம்மம்மொழிந்தவுடன் அகங்காரம் வேறுதேகத்தையடைகின்றமையால் தேகதாதாத்மியம்நீங்கும், பிரமஞானத்தினுல் அஞ்ஞானம் நீங்கினபோது அஞ்ஞானகாரியமான அகங்காரம் அழிகின்றமையால் அப்போதுசாக்ஷியோடுண்டான பிராந்திஜந்நியதாதாத்மியம் நீங்கும், அங்ஙனம். கேவலபிரம்மானுபவமாமென்றுணர்த்தியது. (கo)

அ-கை. எப்போதும் மூன்றவத்தையோடுங்கூடிய ஆத்மாவை - எப்படிநிர்விகாரியென்னலாமென்று சங்கிக்க அகங்காரத்திற்கே அவஸ்தாத்திரயமென்னுங் கருத்தையுணர்த்துகின்ருர்

சுழுத்தியிலகங்கரந்தான் ருேன்றுருதடங்கும்போது ... ... ...*
செழித்திடுதேகங்காஷ்டா சேதனமாகிநிற்கும் ... ... ... ... *
இழித்திடுமகந்தையர்த்த மியங்குதல்சொப்பனந்தான் ... ... *
முழுத்திறமடைதல்சாக்ர மோகமாமவத்தையாமே...... ... ... *

இ-ள். சுழுத்திகாலத்தில் அகங்காரமானது தோன்ருது தன்காரணத்தில் லயிக்கும்போது செழுமையானசரீரம் கட்டைபோல அசேதனமாயிருக்கும் இழிவான அகங்காரம் பாதிவிகாசமடைதல் கனவாகும், அவ்வகங்காரம் பூரணவிகா

சமடைதல் நனவாகிய மோகவவஸ்த்தையென்று கூறப்படும்—எ-று. (தா-ம்.) அகங்காரம் தன்காரணத்தில் முழுதும் லயித்தல் சுழுத்தியவத்தையென்றும் பாதியெழுதல் சொப்பனமென்றும், முழுதுமெழுதல் சாக்ரமென்றுங் கூறி அகங்காரமே-ஆத்மாவில் அவஸ்தாத்திரயகாரணமாமென்றும் அவ்வகங்கார மில்லையாயின் ஓரவஸ்தையுமில்லையென்று மூணர்த்தியது. (கக)

அ-கை: இனி சகலமான திரிசியங்களும் மனதின் கற்பனைமாத்திரத்தினாலேயே யல்லது வாஸ்தவமல்லவென்னுங் கருத்தையுணர்த்துகின்றார்.

சிதாபாசசையோகத்தாற் றிகழுந்தக்கரணவிர்த்தி ... ... ... *
இதாகிதசாக்கிரத்தி லிசைந்தவாசனையாற்சொப்ன... ... ... ... *
விதானங்கற்பிக்கும்போதம் விளங்கிடத்திந்தியங்கள்... ... ... *
சுதானமாய்விஷயவாஸ்யந் தோன்றக்கற்பிக்குமன்றே. ... ... ... *

இ-ள். சிதாபாசனோடுகூடிய வொருமையால் விளங்காநின்ற புத்தி விருத்தியாகியமநம் சுகதுக்கபேதமான சாக்ராவஸ்தையில் அநுபவித்த பதார்த்தசமஸ்காரத்தால் சொப்பனபேதங்களைக் கற்பனைசெய்யும், பிரபோதகாலத்தில் இந்திரியங்கள் தன்னிடமாய் பாஹ்யவிஷயுங்களை விளங்கக் கற்பனைசெய்யும் அன்றே அசை—எ-று. (தா-ம்.) வெளிப்படை. (கஉ)

அ-கை. மநம் அகங்காரம் இரண்டுமாகிய உபாதான காரணத்தினின்று லிங்கசரீரமுண்டாகிறதென்று மதத்தினியல்பைக் கூறுகின்றார்.

மனமகங்கரமிரண்டாய் வருமுபாதானத்துண்டாம் ... ... ... *
இனமுறுமிலிங்கதேக மிதுசடாத்மகமதாகும். ... ... ... *
தினமுற்மூன்றவத்தை சேர்ந்தநுசரித்துநாளும் ... ... ... *
கனனுற்த்தோன்றிநின்றுகழிந்திடலியல்பதாமே. ... ... ...*

இ-ள். மநம் அகங்காரமென்னும் இரண்டான உபாதான காரணத்தினின்றுண்டானது இனமான சூக்குமசரீரம் இது சடாம்சமாகும், நாடோறுமுண்டாகின்ற மூன்றவத்தைகளடைந்து அனுசரித்துக்கொண்டு தோன்றிநின்று ஒடுங்குதல் சுபாவமாகும்—எ-று. (தா-ம்.)—மநம் அகங்காரம் ஞானேந்திரியம், கன்மேந்திரியம், பிராணாதிபஞ்சவாயு, ஆகிய பதினேழான உபாதானத்தினின்றுண்டானது லிங்கசரீரம் இது அநாதிகாலந்தொட்டு மோக்ஷபரியந்தம் ஒன்றாகவேயிருக்கும், தூலசரீரம் அனேகம் உண்டாகும், அழியும், இந்தலிங்கசரீரம் அவித்தையின்காரியமானதால் சடமாகும். சிதாபாசனோடுகூடி அவஸ்தாத்திரயத்தை அநுசரிக்கும், தன்காரியமாகிய தூலசரீரம் பிறக்கும்போது பிறக்கிறதுபோலவும் அது கர்மஒழிவில் இறக்கும்போது இறக்கிறதுபோலவும் இருக்கும், ஆத்மா நிர்விகாரியாய் பரிபூரணமாயிருப்பதால் உலோகாந்தர கமனமுமில்லை சனனமரணமுமில்லை என்றுணர்த்தியது. (கங)

அ-கை. சகலபிரபஞ்சமும் மனதினாற் கற்பிதமென்று சொல்லியதை விஸ்தரித்துக் கூறுகின்றார்.

மாயைதானிரண்டுசெத்தி மருவும்விக்ஷேபமொன்று ... ... *
பாயவாவரணமொன்று பகருமவிக்ஷேபசத்தி ... ... *
ஆயதோரிலிங்கதேக மாதிபிரம்மாண்டமீறாய்... ... ... *
மேயநீள்ப்ரபஞ்சமெல்லாம் விளங்கிடச்சிருட்டிசெய்யும் ... *

இ-ள். மாயையானது இரண்டுசெத்திகளைப்பெறும், ஒன்று விக்ஷேபமென்றும், ஒன்று பரவிய ஆவரணமென்றுமாம், கூறிய விக்ஷேபசத்தி, உண்டானசூக்கும்சரீரமுதல், பிரம்மாண்டபரியந்தமான, சேர்ந்த சகங்களனைத்தும் தோன்றச்சிருட்டிக்கும்—எ-று. (தா-ம்.) மாயைக்கு ஆவரணமென்றும் விக்ஷேபமென்றும் இரண்டுசெத்திகளுண்டு அவற்றில் ஆவரணசத்தி மூலாவவித்தை பிரமாண்டத்திற்கு ஆவரணபூதையாய் ஆவரணசத்தியென்னப்படும், மற்றொன்று மனோருபமாய் விக்ஷேபத்தைச்செய்கின்றமையால் விக்ஷேபசத்தியென்னப்பட்டு மனோரூபமாய் லிங்காதிபிரமாண்டபரியந்தமான சகத்தைக்கற்பிக்குமென்று சிருட்டியைச் சூசிப்பித்தது. மனமே பந்தமோக்ஷங்களுக்குக் காரணம் "இங்ஙனம் உபநிஷத்து, பகவற்கீதை, ஞானவாசிட்டம், பாகவதமுதலிய சாஸ்திரவசனங்களே பிரமாணமாமென்றுணர்த்தியது. (கச)

அ-கை. அனேகசாஸ்திரமுகத்தால் ஆத்மாவினிடத்திருந்து சிருட்டிகாரியமுண்டானதாகக் கேள்வியிருப்பதால் சத்தியமாகிய ஆத்மாவின்காரியமான ஜகத்து என்சத்தியமாகமாட்டாது. அங்ஙனஞ் சத்தியமாகில் அத்வைதபங்கம்வருமேயென்னில் உத்தரம்.

சிருட்டியென்பதுதான்பிரம்ம சச்சிதானந்தந்தன்னில் ... *
பெருத்திடுநாமரூபப் பிரபஞ்சவிலாசமேயாம் ... ... *
பொருத்தமாஞ்சலதியின்கட் புகல்நுரையாதிபோல ... ... *
திருத்தமாம்விவர்த்தமல்லாற் றிகழ்பேதஞ்சற்றுமின்றே ... *

இ-ள். சிருட்டியென்று கூறப்படுவ தியாதென்னில் பிரமமென்று வேதாந்தம் நிரூபிக்கின்ற சச்சிதானந்தப்பொருளில் பெரிதாயிருக்கின்ற நாமரூபபேதத்தாலுண்டான கற்பனைகளாம் உவமையானசமுத்திரத்தில் நுரைதிரைமுதலானவைபோல தெரியப்படும் விவர்த்தமேயல்லாமல் வேற்றுமை இலேசமுமில்லை—எ-று. (தா-ம்.)—இங்ஙனம் பிரமத்தின் விவர்த்தமேயல்லது பிரத்தியகாத்மாவென்பது சத்தியமல்ல அதிஷ்டான சுவரூப அஞ்ஞானத்தினால் உண்டான நாமரூபசகத்து அதிஷ்டான ஞானத்தி லயிக்கும்போது பிரத்தியகாத்மா பரமாத்மா இரண்டும் ஒன்றாமென்னும் அத்வைதத்திற்கு யாதொரு விரோதமும் இல்லையென்றுணர்த்தியது. (கரு)

அ-கை. இந்தப்பிரகாரம் விக்ஷேப சத்தியின் காரியத்தைக்கூறி ஆவரணசத்தியின்காரியத்தையுணர்த்துகின்றார்

மற்ருெருசத்தியுள்ள மருவுந்திர்க்திரிசியபேதம்... ... ... *
உற்றவாகியத்திற்பிரம்ம முதித்திடுஞ்சிருட்டிபேதம்... ... *
இற்றவாமிரண்டுந்தோன்ரு தியற்றுமாவரணமாகும் ... *
பற்றுசம்சாரமூல மெனப்படும்பான்மைத்தாமே... ... ... *

இ - ள். வேருன ஆவரணசத்தி, இருதயாகாயத்தில் பொருந்தியிருக்கின் றது. திர்க்காகிய சாட்சிக்கும் திரிசியமான தேகேந்திரியாதிகளுக்கும் உண்டான பேதமும் வெளிப்புறத்தில், பிரம்மத்திற்கும் சிருட்டிக்கும் உண்டானபேதமும், இவையிரண்டு வேறு பாடுந்தோற்ருமல், மறைக்கின்ற ஆவரணசத்தியாம், பந்த மான சம்சாரத்திற்குக் காரணமென்று கூறப்படும்—எ-று. (தா - ம்.)—ஆவரண சத்தியானது உள்ளே சாட்சிக்கும் தேகாதிகளுக்குமுண்டான பேதத்தையும் வெளியில் பிர்மத்திற்கும் சிருட்டிக்குமுண்டான பேதத்தையும் மறைக்கின்றமை யால் சம்சாரகாரணமென்றது எப்போது இந்தத் திர்க்கு திரிசியங்களின் பேதத் தை அறிகின்ருனே அப்போது திரிசியமெல்லாம் அநாத்மாவென்றறிந்து பிரம ஞாநமுள்ளவனய் அஞ்ஞாநத்தை விட்டு நீங்குகின்ருன் என்றுணர்த்தியது.

அ - கை. ஆவரணசத்திவசத்தாலுண்டான வியாவகாரிக சீவ சுவரூபத்தைக்கூறுகின்ருர்.

சாக்ஷியொளிதானருகினுறத் தயங்குமிலிங்கத்தநுவினுடன் ... ... *
மாக்ஷியுறக்கூடியதாக வயங்குஞ்சிற்சையோகத்தால் ... ... *
காக்ஷியானவிவகாரங் கருதுஞ்சீவனுத்தோன்றும் ... ... ... *
தாக்ஷியானவாவரண சத்திவசத்தாற்சார்ந்ததுவே ... ... *

இ - ள். பிரத்திய காத்மாவினது நாற்புறமும் விளங்கும் பிரகாசமானது, அருகிற்படிகமணிபோற் பிரகாசிக்கின்ற, சூக்குமதேகத்தோடு, மேன்மையாகக் கூடினதாய்க்கொண்டு, விளங்குஞ் சித்தினது பிரதிபிம்பக்கூட்டுறவால், தோற்ற மானவிவகாரங்களை விரும்புஞ்சீவனுகத்தோன்றும், தாழ்வான ஆவரணசத்திவ சத்தினுலுண்டானது—எ-று.(தா-ம்.)—இங்ஙனந்தோன்றிய வியாவகாரிக சீவன் நான்பிராம்மணன்-நான் கிரகஸ்தன்-நான் கர்மஞ்செய்கிறேன் லோகாந்தரங்களில் கர்மபலங்களான சுக துக்காதிகளை யனுபவிக்கிறேன் என்னும் அபிமானத் தோடு ஜநந மரணகமனுகமனங்களை யடைகின்ருன் என்றுணர்த்தியது. (௧௭)

அ - கை. ஆவரணசத்தியழிந்தவுடன் அந்த வியாவகாரிக ஜீவத் தன்மை நீங்குமென்றுணர்த்துகின்ருர்.

ஆயசீவவிவகார மாரோபத்தாற்சாக்ஷியின்பால் ... ... ... *
மேயதாகத்தோன்றுமது மிகுமாவரணமொழிந்திடவே ... *
ஏயசீவன்சாக்ஷியிடத் திசைந்தபேதமுணர்ந்தளவில் ... ... *
பாயசிவாரோபம்போம் பரமார்த்தந்தான்விளங்கிடுமே ... ...*

இ-ள். அங்ஙனமான வியாவகாரிக சீவனது விவகாரம், ஆரோபத்தினுல், நிர்விகாரியான சாட்சியிடத்துள்ளதாகத்தோற்றும் ஆனலது மிக்க ஆவரண

சத்தி நீங்கியவிடத்துப் பொருந்திய சீவன் சாட்சி இவற்றின் வேறுபாட்டறியப்பட்டால் விரிந்த சீவத்துவ கற்பனை போய்விடும் பரமார்த்தாநுபவமுண்டாம்—எ - று. (தா-ம்.)—இந்தச்சீவத்தன்மையானது மிகவுஞ் சமீபத்திருப்பதால் ஆவரணமென்னும் மாயாசத்தி வசத்தால் சாட்சியினிடத்தில் ஆரோபிதமாகும். அதனால் நிருவிகாரியான சாட்சியினிடத்திலும் கர்த்துருத் துவாதி தர்மம்யாவுந்தோன்றும் அந்தச்சாட்சியும் சம்சாரியாவான். ஆனால் தத்வமசியாதி மகாவாக்கியார்த்தமான கூடஸ்தபிரம ஐக்கியஞானமுண்டானபோது அஞ்ஞானம்நீங்கி ஆவரணசத்தியழிந்துபோமென்றுணர்த்தியது. (கஅ)

அ - கை. பிரம்மத்தைமறைக்கின்ற ஆவரணசத்தியின் காரியத்தைப் பின் இரண்டுகவிதைகளாற் கூறுகின்றார்.

அவ்வழிசிருட்டிபிர்ம்ம மாமிவைபேதந்தோன்று ... ... *
திவ்வகைமறைத்துநிற்கு மிசைத்தவாவரணசத்தி... ... ... *
வவ்வதன்வசத்தாற்பிர்ம்மம் விகிர்தமாவயங்கிநிற்கும் ... ... *
எவ்வமில்பிரமந்தானே யிசைத்திடுஞ்சகமதாமே.... ... ...*

இ - ள். அம்முறையே சிருட்டி பிரமம் இரண்டினது வேறுபாடுதெரியவொட்டாமல், இப்பிரகார மறைத்துக்கொண்டிருந்த மேற்கூறிய ஆவரணசத்தியானது பற்றியவசத்தால் பிரம்மம் விகாரமுடையதுபோலத் தோன்றிநிற்கும் களங்கமற்றபிர்மமே கூறியபிரபஞ்சமாயிருக்கின்றது—எ-று. (தா - ம்.)—ஆவரணசத்தியானது திர்க்கு திரிசியங்களான சாட்சி அந்தக்கரணங்களின் பேதத்தை மறைத்துக்கொண்டிருப்பதால் அதன்வசத்தால் பிரமமும் சர்வஞ்ஞத்துவம், சர்வேஸ்வரத்துவம், சர்வசாட்சித்துவம், சர்வபிரேரகத்துவமான விவகாரமுள்ளதாகத் தோற்றுமென்றுணர்த்தியது (சகூ)

அ-கை. இதுவுமது.

பிரமசிருட்டியாவரணம் பிரிந்தபோதிற்பிரமமொடு ... ... *
தரங்கொள்சிருட்டிபேதமிவை தானேவிளங்குஞ்சார்ந்துவருந்... ... *
திரங்கொள்விகாரஞ்சிருட்டியிடைச் சேர்ந்ததல்லாற்பிரமத்தில்... ...*
பரங்கொளாதென்னுளுமொன்றுப் பற்றற்றிருப்பதியல்பாமே. ... ...*

இ - ள். பிரம சர்க்கங்களில் ஆவரணம் நீங்கினவுடனே பிரமத்திற்கும், பிரமசிருட்டிக்குமுள்ள பேதங்களானவை தானேவிளங்கும். திடமாய்த்தோன்றுகின்ற விகாரமானது சிருட்டியின்மாத்திர முண்டேயல்லாமல் பிரமத்தையொருபோதும் அடையமாட்டாது முக்காலமும் அப்பிரமம் ஏகவஸ்துவாய் நிராலம்பமாயிருப்பதுசுபாவம்—எ - று. (தா - ம்.)—இந்தப்பிரமம் சர்க்கம் ஆனது சோதிக்கப்பட்ட தத்பதம் துவம்பதங்களின் ஐக்கியஞானத்தால் ஆவரணமான மாயாசத்தியழிவதால் பிரமசிருட்டிபேதம் ரஜ்சுசர்ப்பம்போல ஆரோபிதம்நீங்கி சுத்தமுத்தகை கவல்லியமான பிரமசுவரூபம் பிரகாசிக்குமென்றுணர்த்தியது.(உo)

அ-கை. தத்துவமசியாதி மகாவாக்கியங்களில் ஜீவபரங்களையொன்ருக அனுபவித்தல் புருஷார்த்தஞ் சித்திக்குமென்று சொல்லப்படுகின்றன. பலவிதநாமரூபபேதத்தை யெங்ஙனம் ஒன்ருகபாவிக்கலாமென்னுஞ் சங்கைக்குமேல் மூன்றுகவிதைகளா லுத்தரங்கூறுகின்ருர்.

அஸ்திபாதிப்பிரியமொடு மாயநாமவுருவைந்து ... ... ... *
சொச்சமாயமுதன்மூன்றுந் துகடீர்பிரமசுவரூபமதாம் ... ... *
எச்சமாயமற்றிரண்டு மிலங்குப்ரபஞ்சவடிவாகும்... ... *
உச்சமூன்றுந்திர்க்குண்மை யுபயந்திர்சியாரோபமதே. ... ... *

இ-ள். காலத்திரயத்திலுஞ் சத்தியமாயிருத்தல் சித்பிரகாசமாயிருத்தல்ஆனந்தமாயிருத்தலுடன் உண்டான நாமம் ரூபம் என்று ஒன்றே, ஐந்துபிரகாரமாம் முதற்கூறிய சுத்தமான மூன்றம்சமும் களங்கமற்ற பிரம்ம ஸ்வரூபமாகும் மேல்நின்ற நாமரூபமான இரண்டம்சமும் விளங்காநின்ற பிரபஞ்ச சுவரூபமாகும் மேன்மையான மூன்றம்சமுந் திர்க் ரூபமானவுண்மைப்பொருளாம் மற்றிரண்டுந் திர்சியமானமித்தையாம்—எ-று. (தா - ம்.)—சத்தியம் ஞானம் ஆனந்தம்பிரமம்என்றுசுருதியிருப்பதால் முதற்கூறிய மூன்றம்சமும் பிரம ஸ்வரூபமாயிற்று நாமரூபம் மித்தியாபேதமாயிருப்பதால் அவித்தையினல் ஆரோபிதமானசகத் சுவரூபமாயிற்று. இங்ஙனம் ஐந்தம்சங்களில் மூன்றுசத்தியமாகவும் இரண்டு மித்தையாகவும் பகுத்தறிய வுணர்த்தியது. (உக)

அ - கை. ஆகையால் அந்தஅம்சங்களில் பொய்யான நாமரூபமிரண்டையுந்தள்ளி உள்ளும் புறம்பும் செய்யப்படும் சமாதி சுவரூபத்தையுணர்த்துகின்ருர்.

நாமரூபங்களிரண்டெனு நவையறவிடுத்தே... ... ... *
ஓமெனும்பர சச்சிதானந்தமேயுணர்வாய் ... ... ... *
ஏமமாரிதயாம்புயந் தனிற்புறத்தெனினும்... ... ... ... *
தாமருஞ்சமாதியைச் சதாபுரிதரத்தகுமே ... ... ... ...*

இ-ள். நாமம் ரூபம் என்று கூறுமிரண்டான பொய்நீங்கவிடுத்து பிரணவமென்னும் பரமசச்சிதாநந்த பாவனையுள்ளவனுய் சுகாகாரமான இர்தயகமலத்திலும் புறம்பிலும் ஆத்மவிசாரமுடையோர்கள் அரியசமாதியை எப்போதுமேகபாவனையாகச் செய்யக்கடவர்—எ - று. (தா - ம்.)—மனதில் தியானரூபமாகவும் வெளியில் சின்மாத்திரமாகவும் நாமரூப பேதங்களைவிட்டு எங்குஞ் சச்சிதானந்தமாகவே ஏகாக்கிரமான சமாதியை நிரந்தரஞ்செய்யவேண்டும். இங்ஙனம் நாமரூபங்களைவிட்டுச் சச்சிதானந்தமாகப் பார்க்கும்போது சம்சயமற பரமாத்துவிதசொரூபாநுபவம் உண்டாம் இஃதே நித்தியசமாதி யென்றுணர்த்தியது. (உஉ)

அ - கை. முன்சொன்னகருத்தையேவிவரித்துச்சொல்லுகிருர்.

பூதமைந்தின்மயமாகிப் பொலிந்ததேவர்விலங்குநரர் ... ... *
ஏதவுடலிற்பின்னமற இலங்குஞ்சச்சிதாநந்தம் ... ... *

ஓதுந்தன்மையென்றுமொன்று முரைத்தநாமரூபங்கள் ... ... *
பேதமாகிநானுவாயப் பேசுமித்தியாதோற்றரவாம் ... ... *

இ - ள். பஞ்சபூதமயமாய் விளங்காநின்ற தேவர் மிருகம் மனிதர் சரீரங்களிற் பிரிவின்றி விளங்குகின்ற சச்சிதாநந்தம் என்றும், ஒரேதன்மையாயிருக்கும் சொல்லப்பட்ட நாமரூபங்கள் பலவாகக்கூறப்படும் பொய்த்தோற்றமாம்— எ-று. (தா-ம்)—பஞ்சபூதமயமான தேவாதிசகலசரீரங்களிலும் அஸ்திபாதிபிரியம் என்னும் சச்சிதானந்தாம்சங்கள் மூன்றும், பிரத்தியக்ஷமாக அனுபவிக்கப்படுகின்றன, நாமரூபம் இரண்டுமாத்திரம் மித்தியாபேதஞான காரியமாதலால் வேறுபட்டுப் பொய்யாகுமென்றுணர்த்தியது. (உரு)

அ-கை. உள்ளும்புறம்புமாக பகுத்தேர்ப்படுத்தப்பட்ட இலக்கணமுள்ள இருவிதசமாதிகளையுந் தொகுத்துக்கூறி மேல்விசேஷித்து ஆறுவிதசமாதியுங் கூறத்தொடங்குகின்றார். அவற்றில இருவிதசமாதியைக்கூறுகின்றார்.

சவிகற்பநிருவிகற்ப சமாதிகளிரண்டாமுள்ளம் ... ... ... ... *
அவமறவியற்றுகின்ற தறைந்தவிச்சவிகற்பந்தான் ... ... ... *
நவதிரிசியாநுவித்த நவையில்சத்தானுவித்தம்... ... ... *
துவிதமாமிவற்றின்பான்மை தொடர்ந்தினியுரைக்கின்றோமே ... *

இ-ள். இருதயத்தில்குற்றமறச் செய்கின்றசமாதி சவிகற்பம் நிருவிகற்பமென்றிருவகையாம். சொல்லப்பட்ட சவிகற்பசமாதியானதுபுதுமையான திரிசியாநுவித்தமென்றும், குற்றமற்றசத்தானுவித்தமென்றும், இரண்டுபிரிவாம் இவைகளின்றன்மையை இனித்தொடர்ந்துகூறுகின்றோம்—எ - று.—(தா-ம்.)—சவிகற்பமாவது பிரமத்திற்குவேறான திரிசியங்கள் மாயாகற்பிதமாதலால் அவ்விகற்பத்தோடுகூடியசமாதி சவிகற்பமென்னப்படும். அவ்விகற்பமின்றிகேவல பிர்ம்மாநுபவமாத்திரந்தோற்றுகின்ற சமாதிநிருவிகற்பமென்னப்படும். சமாதியாவது-பிரம்மத்தில்மனம் ஒருமித்துவைக்கப்படுதல் அச்சவிகற்பசமாதி திரிசியாநுவித்தமென்றும், சத்தாநுவித்தமென்றும், இரண்டுவிதமாமென்றுணர்த்தியது. (உச)

அ - கை. திரிசியாநுவித்தசமாதியின்னதென்றுணர்த்துகின்றார்.

காமமாதிசித்ததன்மங் கருதுந்திரிசியமெனக்கண்டு ... ... ... *
தாமங்கவற்றின்சாக்ஷியதாத் தனிச்சேதனமாத்தியானித்தல்... *
நாமமிதற்குத்திரிசியாநுவித்தநவிலுஞ்சவிகற்ப ... ... ... *
சேமசமாதியெனச்சுருதி செப்புமவித்தைதீர்தற்கே. ... ... *

இ-ள். காமமுதலியமனோதருமங்களெல்லாம் சங்கற்பமான திரிசியமென்றறிந்து தாம் அவைகளுக்குச் சாட்சியான ஏகாத்மாவாகத் தியானித்தல் திரிசியாநுவித்த சவிகற்பமான சுகசமாதியென்று அஞ்ஞாநநீங்கும்படி வேதங்கூறுகின்றன—எ-று. (தா-ம்)—காமம்-இச்சை, சங்கற்பம்-நினைப்பு, விசிகிச்சை - சம்சயம், சிரத்தை-விசுவாசம், திர்தி-தைரியம், இரீஇ - வெட்கம், தீ-புத்தி, பீதி-பயம், என்னும் இவையெல்லாம் மனமேயென்று சுருதிசித்தமா யிருப்பதால்

இவை மனோதருமங்களேயாம். ஆதலால் இத்திரிசியங்கள் ஆத்மாவினுல் அறியத்தக்கவையென்றறிந்து ஆத்மாவை யிவற்றிற்குச் சாட்சியாகத் தியானிக்கவேண்டும். அங்ஙனந் தியானிப்பதில் திர்சியங்கலந்தமையால் இது திர்சியாநுவித்தமாமென்றுணர்த்தியது.. (உரு)

அ-கை. இரண்டாவதான சத்தாநுவித்த சமாதியினிலக்கணமுணர்த்துகின்றார்.

அசங்கசச்சிதானந்த சொப்பிரகாசனுமாகி ... ...*
இசைந்தவத்துவய சுவரூபியாயிருக்கின்றேனென்னும் ... *
அசைந்திடாதவிச் சமாதியேசத்தா நுவித்தம் ... ... *
நிசந்தருஞ்சவி கற்பமென்றிசைப்பநீள்சுருதி.... ... ... ...*

இ - ள். ஒன்றிலும் பற்றில்லாதவனுயும், சத்தியஞானாநந்த சுவரூபியாயும், சுயம்பிரகாசனுமான அத்வைதஆன்மாவா யிருக்கிறேனென்னும், அசைவற்ற இந்தச்சமாதி தான் சத்தாநுவித்தமான வுண்மையைத்தரும். சவிகற்பசமாதியென்று வேதங்கூறுகின்றன—எ - று. (தா-ம்.)—இந்தப்புருடன் சங்கற்பமற்றவனென்று சுருதியிருப்பதால் அசங்கனுகும் ஒருவனே தேவனென்று சுருதியிருப்பதால் ஆத்மாதுவைதவர்ச்சிதனுகும் இவ்வாத்மாவே நானென்று பாவித்தலால்சத் தாநுவித்தமென்றுணர்த்தியது. (உசு)

அ-கை. மேல்நிருவிகற்பசமாதியைக் கூறுகின்றார்.

துகடீர்சுவானுபூதிரசத் துதியாநந்தபூரணத்தால் ... *
சகமாந்திர்சியஞ்சத்தமொடுஞ் சாராதமைந்தயோகிக்கே ... *
சுகமாத்தோன்றிநிவாததலச் சுடர்போற்றிதமாய்நிற்கின்ற ... *
இகமார்சமாதிநிருவிகற்ப மென்னுந்துரியநிலையமதே ... *

இ - ள் களங்கமற்ற சுவாநுபூதி ரசமாத்தோன்றும் பூரணாநந்தத்தால் உலகமான திரிசியமும் சத்தமுந்தோன்றுமல் நிலைபெற்ற யோகிக்கு ஆனந்தாகாரமாய் விளங்கிக் காற்றில்லாவிடத்துள்ள தீபம்போல அசைவற்றிருக்கின்ற இந்தச்சமாதியே சத்தாநுவித்தநிருவிகற்பமான துரியமென்றுகூறப்படும்—எ-று (தா - ம்.)—சுவாநுபவமாய் நிறைந்த யோகிக்கு திரிசியசத்தாபேக்ஷை யின்மையெப்படியென்னில் தியானத்தாலாத்மாகாரமாய்நின்ற சித்தவிருத்திக்கு அவித்தையின்மையா லதனுனுண்டாந்திரிசியசம்பந்தமில்லை. அங்ஙனஞ் சகல விகற்பமுமற்று ஆத்மாமாத்திரம் பிரகாசிக்கும். இஃதேநிருவிகற்பசமாதியாம் இந்தச்சமாதி ஒருகணமேனும்புரிபவன் ஜீவன் முத்தனுமென்றுணர்த்தியது. (உஎ

அ - கை. பாஃஙியசமாதி மூன்றினுள் முதற்சமாதியைக் கூறுகின்றார்.

இதயத்தேபோல்வாகியத்து மெவ்வெவ்வஸ்துதோன்றிடினும் ... *
சதமாஞ்சன்மாத்திரமல்லாற் சாற்றுநாமரூபங்கள் ... ... ... *

திதமாப்பிரித்துநீக்குதலே சிறந்தமற்றோர்சமாதியதாம் ... *
இதமாமிதனையாதியதென் றிசைத்தார்முன்னூலுணர்ந்தோரே ... *

இ - ள். இதயத்திற்போல புறத்திலும் எவ்வெப்பொருள் தோன்றினும் நிலையான சத்தாமாத்திரமேயல்லாது நாமரூப பேதமெவ்வளவும் இல்லையென்று திட்டமாய் நீக்குதலே சிறந்த மற்றொரு சமாதியாம், சுகமானஇச்சமாதியை வேதமுணர்ந்தபெரியோர் ஆதிசமாதியென்றுரைத்தார்—எ - று. (தா - ம்.) உள்ளும்புறமும் நாமரூபபேதங்களைத்தள்ளி பிரமமே பூரணமென்று தியானிக்கவேண்டும் நாமரூபம் பிரமவிவர்த்தமாதலால் பொய்யாம் எங்ஙனமென்னில் சுத்தியில் இரசிதம்போல காரணத்திற்காரியம் ஆரோபமாதலால் பிரமசுவரூபத்தில் நாமரூபங்களையொடுக்கி தியானித்தல் ஆதிசமாதியென்றுணர்த்தியது. (உஅ)

அ - கை. மத்தியசமாதியைக்கூறுகின்றார்.

அகண்டமாயேகவிரதமாஞ்சச்சி தானந்தவற்புதசொரூபம் ... *
மிகையிலத்வைதபூரணமென்ன மேதகுநிரந்தரசிந்தை ... *
தகைதரப்புரிதல்மத்தியமென்னச் சாற்றிடுசமாதியாமென்பர் ... *
சுகமுற்றமுன்சொல்விகற்பநிர்விகற்பத் தொடர்புளதாதலினன்றே. ... *

இ - ள். பூரணமாகவும் ஏகரசமாகவும் இருக்கின்ற சச்சிதாநந்தத் திவ்வியசுவரூபம் களங்கமற்ற பூரணமென்று மேன்மையாகச் சதோத்தியானஞ் செய்தல் மத்தியசமாதியென்றுகூறுவார். சுகிக்கும்படி முற்கூறிய சவிகற்ப நிருவிகற்பமிரண்டிலும் சம்பந்தப்படுதலால்—எ - று. (தா-ம்.)— பரமமாதலால் அகண்டைகரசமென்றும், சத்ரூபமாதலால் சத்தென்றும், விஞ்ஞானகனமாதலால் சித்தென்றும், பிரியமாதலால் ஆநந்தமென்றும் அனேகபேதமானதேவதிரியக்நராதிகளில் சாக்ஷியாயிருப்பதால் ஒன்றென்றும் வஸ்துவைநீங்காமற் பாவனைசெய்வது சவிகற்பம் நிருவிகற்பமான இரண்டு சம்பந்தமிருப்பதால்மத்தியசமாதியென்றுணர்த்தியது. (உகூ)

அ - கை. ஆறாவது முடிவானசமாதியைக்கூறுகின்றார்.

ஆதம்போதாநந்தத்தா லமைந்ததம்பம்போலுமனம் ... *
தோற்றமின்றியசைவற்ற துரிசில்சமாதியாமுனைத்த ... *
தேற்றமானநிருவிகற்பச் செயல்போற்சிறந்ததிவையாறும் ... *
ஆத்தமாகநிரந்தரமா யமைந்துகாலங்கழித்திடவே ... ... *

இ - ள். ஆத்ம ஞாநாநுபவாநந்தத்தால் அசைவற்ற தம்பம்போல மனோவிரித்தியின்றி அசைவற்று நிற்பதே களங்கமற்ற சமாதியாம்முன்னம் நாங்கூறிய தெளிவான நிருவிகற்ப சமாதிபோல சிறப்புடையது. இவ்வாறுவகைச்சமாதிகளும் சதாகாலஞ் செய்யத்தக்கவை—எ-று. (தா-ம்)—ஆத்மாகாரமாகமனமசைவற்று நிறைந்திருத்தல் ஆந்திரநிருவிகற்பம்போல இது பாஃகியநிருவிகற்பசமாதியாம் இந்தச் சமாதியுடையோனிடத்துப்பிரபஞ்சநிறைந்திருக்குதென்றுசுருதிவாக்கியம். இவ்வாறு சமாதிகளில் காலஞ்செல்லவேண்டுமென்றுணர்த்தியது

அ - கை. மனம்சலனசுவபாவமாதலால் ஒருக்ஷணகாலமுநில்லாதே என்னுஞ்சங்கைக்கு வைராக்கியம் அப்பியாசமென்னும் இரண்டுபாயத் தாற்கூடுமென்றுணர்த்துகிறார்.

தேகாபிமானநீங்கித் திகழ்பரமார்த்தபோத ... ... ... ... *
வாகார்முணர்ந்தபோதி லசைமனதெங்கெங்கேனும் ... ... ... *
ஏகாநின்றுளதங்கங்கேயிசைதருசமாதியாகும் ... ... ... *
வாகார்மெயப்பொருளேயெங்கும்வபங்குறுகின்றதாலே ... ... *

இ - ள். தேகாபிமானம்விட்டு விளங்காநின்ற பரமார்த்த ஞானமானபோது சலிக்கின்றமனம் எவ்வெவ்விடத்துச்சென்றாலும் அவ்வவ்விடத்துஞ்சமாதியேயாகும் எவ்வாறென்னில் சமமானமெய்ப்பொருள் எவ்விடத்தும் விளங்குதலால்—எ-று. (தா - ம்.)—தத்பத துவம்பத ஐக்கிய ஞானாப்பியாசத்தால் அவித்தையொழிந்து பரமாத்ம சுவரூபமாய்விளங்கும்போது எங்கும் சிவாகாரமாதலால் பிரமாகாரமாய்ச் செய்யப்பட்ட விரித்தி சமாதியேயாம் சகலபாபங்களும் பிராரப்தமுமில்லையென்று சுருதிப்பிரமாணம். ஆதலால் கிர்தகிர்த்தியனுமென்றுணர்த்தியது. (கூக)

அ - கை. மேல் தத்துவ மசியாதிவாக்கியத்தில் கூறிய துவம்பதத்திற்குமுக்கியார்த்தமான ஆத்மாவைக்காண்பிக்கும்பொருட்டுச்சாகாசந்திரஞாயத்தால் கற்பிதமான ஸ்தூலதிரிசிய ரூபங்களை நிஷேதித்துப் பரமார்த்தமான சூக்கும திர்க்கு சுவரூபத்தை தரிசிப்பிக்கும்பொருட்டுமுதலில் ஜீவன் ஒருவனுக்கே மூன்றுதன்மையுண்டென்றுணர்த்துகின்றார்.

சிவன்றானேயவச்சின்னன் சிதாபாசன்சொப்பனகற்பன்... ... *
ஆவதான்முத்தன்மை யடைந்தோனுகவறிதக்கோன் ... ... ... *
மேவுமவரின்முன்னேனே விளங்குகடாகாயம்போல ... ... ... *
ஓவிலவச்சின்னன்றானு முயர்ந்தபாரமாத்திகனே ... ... ... ... *

இ - ள். சீவாத்மாவே அவச்சின்னனென்றும் சிதாபாசனென்றும் சொப்பன கற்பிதனென்றும் ஆகிய மூன்றுதன்மையுடையோனுக அறியத்தக்கது அவருள்முதற்கூறப்பட்டவன் தோன்றுங்கடாகாயம்போல நீங்காத அந்தக்கரண அவச்சின்னனுவான் மேலான பாராமாரத்திகனென்றுங் கூறப்படும்—எ - று (தா-ம்.) கடத்தில் அவச்சின்னமான ஆகாயம்போல அந்தக்கரண அவச்சின்னன். பாரமார்த்திகனும் அகங்காரத்திற்பிரதிபலித்த ஆத்மாபாசன் சிதாபாசனுனவியாவகாரிகனும் சிதாபாசனிடத்தில் நித்திரையிற்கற்பிதனுகத்தோன்றினேன் சொப்பனகற்பிதனும். பிரதீதிமாத்திரமாகத் தோன்றுதலால் பிராதிபாசிகனென்னப்படும். இங்ஙனம் ஒருவனே அவஸ்தாபேதத்தினுல் மூன்றுவிதமாகிறானென்றுணர்த்தியது. (கூஉ)

அ கை. பரிமிதாகாரனுதலால் அவச்சின்னசீவன் எங்ஙனம்பாரமார்த்திகனுவானென்னும் சங்கைக்கு உத்தாரம்.

கற்பிதமாதலாலே யவச்சேதங்கருதுமித்தை ... ... ... *
உற்றதோரவச்சேத்தியந்தா னுண்மையவ்வவச்சேதத்த ... ... *

அற்றமில்பிரத்தியகான்மா சீவத்வமாரோபத்தால் ... ... ...*
பெற்றிடும்பரமார்த்தந்தான் பேதியாச்சுபாவமாமே. ... ... *

இ-ள். அவச்சின்னம் கற்பனையாதலால் பொய்யாம், அவச்சேத்தியமான வஸ்துவோவென்னில் உண்மையாம். அந்தஅவச்சின்னனான அழிவற்றபிரத்தியகான்மாவில் சீவத்தன்மை ஆரோபத்தாலுண்டாம். பரமார்த்தம் பேதிக்கப்படாத சுவபாவமாகும்—எ-று. (தா-ம்.)—பிரத்தியகாத்மாவினிடத்தில் அந்தக்கரணசாமீப்பியத்தால் சீவத்வம் ஆரோபிதமாகும், பரமார்த்திகம்சுவபாவமாகுமென்றுமுணர்த்தியது. (அவச்சேதம் பேதப்படுத்தும் விசேஷணம், அவச்சேத்தியம்பேதிக்கப்படும் விசேஷியம்.) (ருரு)

அ-கை. ஆதலால் அவச்சின்னனுக்கே பிரமத்தோட்யிக்கியமென்று சுருதிப்பிரகாரம் கூறுகின்றார்.

அவச்சின்னசீவனுக்கே யகண்டபூரணமாய்நின்ற ... ... *
துவக்கறுபிரமத்தோடுந் தொடர்பயிக்கியத்தைச்சொல்லும் ... *
அவப்பவநீக்குந்தத்வ மசியாதிவாக்கியங்கள் ... ... ...*
நிவப்புறுமிதரசீவ விரண்டிற்குநிகழ்த்தாவன்றே ... ... *

இ-ள். அந்தக்கரண அவச்சின்னனான சீவனுக்கே அபின்னபூரணநிராலம்பபிரமத்தோடு தொடர்பான ஐக்கியஞ்சொல்லப்படும். பயனின்றிய பிறவியைநீக்கும்; தத்வமசிமுதலிய சுருதிவாக்கியங்கள். மேல்வியாவகாரிக பிராதிபாசிக சீவனிரண்டிற்கும் ஐக்கியங்கூறவில்லை—எ-று. (தா-ம்.)—மற்றிரண்டு சீவர்களும் கற்பிதராதலால் வேதம் ஐக்கியம்கூறவில்லையென்றுணர்த்தியது. (ருச)

அ-கை. பூதபௌதிகங்களான ஜகத்துஜீவன்முதலானவை மாயாகற்பிதமென்னபடும். அந்தமாயைஎந்தஅதிஷ்டானத்திலிருந்து எவ்வகைகற்பிக்குமென்னுஞ்சங்கைக்கு உத்தரம்.

பிரமத்தினின்றுமாயைபேசும்விக்ஷேபமென்றும் ... ... *
திரமிலாவரணமென்றுந் திகழிருசத்தியாக ... ... ... *
வரமுறும்கண்டத்தன்மை மறைத்தந்தப்பிரமத்திற்கு ... *
தரமுறுசகத்தைச்சீவர் தமையுங்கற்பிக்குமன்றே. ... ... *

இ-ள். மாயையானது பிரமத்தின்வசமாயிருந்துகொண்டு கூறியவிக்ஷேபமென்றும், நிலையற்ற ஆவரணமென்றும், இரண்டுசத்திகளாய் மேலானபிரமத்தினது அகண்டாகாரத்தன்மையை மறைத்துக்கொண்டு தாரதம்மியமானபிரபஞ்சத்தையும் ஜீவர்களையும்,கற்பனையாகத்தோன்றச்செய்யும்—எ-று.(தா-ம்.)—மாயையானது ஆவரணசத்தியால் பிரமத்தினது பூரணத்தன்மையை மறைத்து ஜகசீவர்களை கற்பிக்கும், இதனால் மாயை சீவர்களை ஆசிரயித்திருக்குதென்று கூறும்சிலர் அசத்வாதத்தை நீக்கப்பட்டது. மாயை முன்னமே உண்டாயிருக்கப்பின்பு சீவனுண்டானால் இவனெப்படி மாயாசிரயனவான். இந்தக் கருத்து சம்க்ஷேப

சாரீரகத்திலும், பகவத்கீதையிலும், சொல்லியிருக்கின்றது. ஆதலால் பிரமோபாதியானமாயை பிரமவிவர்த்தங்களாக சுத்தியில் இரசிதம்போலவும், ரச்சுவில் சர்ப்பம்போலவும், மருமரீசிகைபோலவும், ஜாலவித்தைபோலவும், சகசீவர்களைக் கற்பிக்குமென்றுணர்த்தியது. (௫௫)

அ-கை. வியாவகாரிக சீவசகத்தினது சுவரூபத்தைக் கூறுகின்றார்.

அந்தக்கரணசிதாபாசனுய சீவன்விவகாரி ... ... ... *
வந்தபூதபௌதிகங்கள் மருவும்வியாவகாரிகமாம் ... ... ... *
முந்துஜகமாமிவ்விரண்டு முளைத்தவனுதிகாலமுதல் ... *
பந்தநீங்குமோக்ஷமுறு பரியந்தந்தானின்றிடுமே. ... ... *

இ-ள். அந்தக்கரணத்துள்ள சிதாபாசனுகிய சீவனே வியாவகாரியாம் அவித்தையினுற் கற்பிதமான பஞ்சபூதங்களும் அவற்றின்காரியமான பௌதிகங்களும், வியாவகாரிக ஜகத்தாகும். இவையிரண்டும் சிருட்டியான அனுதிகாலந்தொட்டு பந்தநீங்குகின்ற மோக்ஷகாலம்வரையில் உள்வாயிருக்கும்—எ - று. (தா-ம்.)—அகங்காரத்திற் பிரதிபலித்த சின்மாத்திராபாசனுன சீவன் பாரமார்த்திகனுற் கற்பிதனுதலால் வியாவகாரிகனென்னப்படும். பூமிமுதல் பிரமலோகபரியந்தமான பூதபௌதிகப் பிரபஞ்சமெல்லாம் மாயாகாரியமாதலால் வியாவகாரிகமாகும். இந்த வியஷ்டிசமஷ்டிரூபமான சகசீவனிரண்டும் அனுதிகாலந்தொட்டு உண்டாயிருந்து மோக்ஷம்வருங்காலத்தில் அழியும், அஞ்ஞானம் இருக்கும்வரையில் இவ்விரண்டும் இருக்கும், சீவபரங்களுக்கு ஐக்கியஞானம் உண்டானபோது இல்லையாமென்றுணர்த்தியது. (௫௬)

அ-கை. சொப்பன கற்பிதமான பிராதிபாசிக சீவ சகத்துக்களைக் கூறுகின்றார்.

சிதாபாசனிடத்தினின்றுந் திகழ்தருநித்திராமோகம் ... ... ... *
விதானவாவரணவிக்ஷே பங்களாய்விளங்கிப்பூர்வ... ... ... *
எதாசிவசகத்தைக்காணு திலகநூதனமாத்தோன்றும்... ... *
நிதானமாம்பிராதிபாசிய நிகழ்சீவசகங்கற்பிக்கும்... ... ... ... *

இ-ள். சிதாபாசனுன வியாவகாரிக சீவனிடத்தினின்று தோன்றும் நித்திரைமயக்கமானது கற்பனையான ஆவரண விக்ஷேபங்களாயிருந்துக்கொண்டு, முன்னுள்ள இயல்பான வியாவகாரிக சீவசகத்துக்களை, காணுது நூதனமாய் விளங்குகின்ற நேர்மையான பிராதிபாசிக சீவசகத்துக்களை கற்பனைசெய்யும்—எ-று. (தா-ம்.) சிதாபாசன் பிரமாபாசனுதலால் - வியாவகாரிக சீவனுகும். நித்திரையும் - மாயாபாசமாகும். அஃதும் முன்னிருந்த வியாவகாரிக சீவசகத்துக்களை மறைத்து பிராதிபாசிக சீவசகத்துக்களை கற்பிக்குமென்றுணர்த்தியது. (௫எ)

அ - கை. இதுவுமது

சேரும்பிரதீதிமாத்திரமே திகழுஞ்சொப்பனசகசீவன்... ... ... ... *
தேரும்பிராதிபாசிகமாச் செப்பலாகுமேதென்றால் ... ... ... *

சாருந்துயிலைநீத்தெழுந்தோன் ருனேபின்னுந்துயில்போதில் ... ...*
நேருமவைகாணுமையினு நிலையில்தோற்றமாத்திரமே. ... ... *

இ-ள். பிரதீதிமாத்திரமாக, விளங்கும்சொப்பனகாலத்தில் இருக்கின்ற சக சீவனிரண்டும், தெளிவாய்ப் பிராதிபாசிகமென்று கூறப்படும். எதினுலென்ருல், சேர்ந்த நித்திரையைவிட்டெழுந்தவன், தான் பின் நித்திரைசெய்யும்போது சேர்ந்த அந்த கற்பித சகசீவன் காணப்படாமையால் நிலையின்றித்தோற்றமாத்திரமாயிருக்கும்—எ-று. (தா-ம்.)—கற்பிதசீவசகத்திரண்டும், பிரதீதிகாலத்தில்மாத்திரந் தோற்றுகின்றபடியால் பிராதிபாசிகங்களாகும். எங்ஙனமெனில், முதல் நித்திரையிறருென்றுஞ் சொர்ப்பனத்திற்கண்ட சீவசகத்துக்களைவிழித்துப் பின்னுந் தூங்கும்போது காணப்படாமையாலு மென்றுணர்த்தியது. (ருஅ)

அ - கை. இதுவுமது.

இந்தப்பிரதிபாசிகசீவனியைந்த சகத்தைப்பிரதிதியதாய்ச் ... ...*
சிந்தைபுரியான்வாஸ்தவமாத் தெரிந்தேயனுகுஞ்சுகதுக்கம்... ... *
முந்தும்வியாவகாரிகனே மோகபித்தையெனக்காண்பன்... ... ...*
வந்தவியாவகாரிகனும் பரமார்த்திகனுல்வயங்குறுமே. ... ... ... *

இ-ள். இப்பிரதிபாதிக சீவனுனவன், சேர்ந்தசகத்தைப் பிரதீதிமாத்திரமாய் நினைக்கிறதில்லை, உண்மையாகக்கொண்டு சுகதுக்கங்களை யனுபவிப்பான், முற்கூறிய விவகாரிகசீவனே, மயக்கத்தாலுண்டான பொய்யென்றெண்ணுகிருன், தோன்றிய விவகாரிகசீவனும், பரமார்த்திக, சீவனுலறியப்படும்.—எ-று. (தா-ம்.) பிராதிபாதிகசீவன் பிராதிபாசிகமான சகத்தையும் தன்னையும் சொப்பனகாலத்தில் உண்மையாகவே யெண்ணுகிருன், அவனே நித்திரைவிட்டெழுந்தபின்பு நான்வேருன விவகாரிகனென்றெண்ணுகிருன். இவ்விவகாரிகசீவனும் பாரமார்த்திகனுல். அறியப்படுமென் றுணர்த்தியது. (ருகூ)

அ-கை. இதுவுமது.

இந்தவிவகாரிகசீவ னிசைந்தசகததைச்சத்தியமாச் ... ... ... ...*
சிந்தைபுரிந்தேயனுபவிக்குந் திகழும்பாரமார்த்திகனே... ... ... *
முந்துமிவையாவையுமென்று மோகபித்தையெனக்காண்பன் ... ...*
வந்தகுருமூர்த்தியினருளால் மாவாக்கியார்த்தம்விசாரித்தே. ... *

இ-ள். இவ்வியாவகாரிக சீவனுனவன், பொருந்திய வியாவகாரிகசகத்தை எதார்த்தமாக எண்ணிநம்புகின்ருன். விளங்கும் பாரமார்த்திக சீவனுனவன், முற்கூறிய இவைகளெல்லாம் எப்போதும் மயக்கமான பொய்யென்று காண்கின்ருன். நிஷ்காமிய தபத்தாற்கிடைத்த ஞானசாரி அநுக்கிரகத்தால், மகாவாக்கியப்பொருளை விசாரித்துணர்ந்து.—எ-று. (தா-ம்.) வியாவகாரிகசீவன் தன்னையும்

பூதபௌதிகங்களான வியாவகாரிக சகத்தையும் சத்தியமாய் நம்புகிறான். பார மார்த்திகன் அவற்றைப் பொய்யென்றறிகிறான், நெடுங்காலவாசனையினால் பரி சோதிக்கப்பட்ட அந்தக்கரண சுத்தியுடையவனாய் குருபாத சிஷ்ருஷைசெய்தத னாற்பெற்ற தத்துவமசியாதி மகாவாக்கியங்களிற்கூறிய சீவபர ஐக்கியஞானத் தைப் பிரத்தியக்ஷமாக அனுபவிப்பன் என்றுணர்த்தியது. (சுo)

அ-கை. இதுவுமது.

இலங்குபரமார்த்திகசீவ னேகப்பிரமமாத்திரமே ... ... ... ...*
நலங்கொள்பாரமார்த்திகமா நயந்துநோக்கியுணர்கின்றான் ... ... *
கலங்குமன்னியமானவெலாங் காணான்காணத்தோன்றிடினும்... ...*
விலங்குமசத்தியமாக்காண்பன் மேவுங்கானற்சலம்போல. ... ... *

இ-ள். இந்தப்பாரமார்த்திக சீவனானவன், பிரமமொன்றைமாத்திரம் நன் மையுள்ள பாரமார்த்திகமாக விருப்புற்றுக்கண்டறிகின்றான், மயக்கமானமற்றொ ன்றையும் பிரித்துக்காண்பதில்லை, காணத்தோன்றினாலும் [நீக்கமான மித்தையா கக்காண்கின்றான், தோற்றமாத்திரமான கானற் சலத்தைப்போல.]—எ - று. (தா-ம்.) பாரமார்த்திகசீவன் பிரமமொன்றைமாத்திரம் சத்தியமாயெண்ணுகிறா ன். மற்றசகசீவாதிகளை பார்க்கிறதேயில்லை. ஒருபக்ஷம் விவகாரதசையில் பார்ப் பானாகில் அப்போது இரட்டைசந்திரன்போலும் கானற்சலம்போலு மித்தையா கக்காண்கிறானென்றுணர்த்தியது. (சுக)

அ-கை. இந்தப்பிரகாரம் பாரமார்த்திகன் வியாவகாரிகன் பிராதிபாசிகன் என்னும் மூன்றுவித சீவபேதத்தைச்சொல்லி அவற்றுள் கற்பிதரான வியா வகாரிக பிராதிபாசிகனிருவரும் மித்தையென்பதைக்காண்பித்துஇப்போது அதனைச் சுலபமாக அறியும்பொருட்டு சலதிருஷ்டாந்தத்தினாற் றெளிவாக இரண்டுகவிகளாற் கூறுகின்றார்.

மாதுர்யம்திரவஞ்சைத்தியம் வருமாதிசலத்தின்றன்மம் ... *
போதருதரங்கத்தூடும் பொருந்தநுகதமாய்நிற்கும்... ... ... *
ஏதுவாமதனிற்றோன்றி யிலங்குறுநுரையினூடும் ... ... *
பேதமின்றாகிநிற்கும் பேசியகுணங்கள்போல. ... ... ...*

இ-ள். இனிப்பு, பெருக்கம், குளிர்ச்சிமுதலாக சலத்திலுள்ள குணங்கள், எழுகின்ற அலைகளிடத்தும், கூடிக்கலந்திருக்கும். காரணமானவதிலுண்டாய் வி ளங்குகின்ற நுரையினிடத்தும், மேற்கூறிய குணங்கள் வேறுபடாதுநிற்கின்ற தன்மைபோல.—எ-று. (தா-ம்.)—வெளிப்படை. (சுஉ)

அ-கை. இதுவுமது.

சாக்ஷியாம்பிரத்தியகான்ம சச்சிதானந்தச்சார்பால் ... ... *
காக்ஷியாம்வியாவகாரி கலந்திடுஞ்சத்தியமாதி ... ... ...*
தாக்ஷியாமதனின்சார்பாற் றங்குறும்பிரதிபாசற்கும் ... ... *
மாக்ஷியாம்பரமார்த்தன்றான் வயங்குறுந்தான்றன்னாலே. ... ...*

இ-ள். சாக்ஷியாய்நின்ற பிரத்திய காத்மாவினது, சத்தியஞானனந்த சம்பந்தத்தால், காணப்படும் வியாவகாரிகசீவனிடத்திலும், சத்தியமுதலிய குணங்களுண்டாம். தாழ்வான அந்தவியாவகாரிகன்வழியாய், பிரதிபாசிக சீவனிடத்திலும் அக்குணங்க ளநுகதமாயிருக்கும். மேலான பாரமார்த்திகன் தானே தன்னால் விளங்குகின்ருன்.—எ-று. (தா-ம்) வெளிப்படை. (சுரு)

அ-கை. இந்தப்பிரகாரம் பிரவிர்த்தியைச்சொல்லி இனி நிவர்த்திக்கிரமத்தை திஷ்டாந்தத்துடன் இரண்டுகவிகளால் சொல்லுகின்ருர்.

தோன்றிடுநுரைகடரச் சொற்றிடுபெருக்கமுன்னும் ... ...*
ஏன்றிடுமதனின்றன்ம மியன்றிடுந்தரங்கந்தன்னில் ... ... *
கான்றிடும்வழிகடரக் கல்லோலஞ்சலத்தினென்ற ... ... *
ஆன்றமாதுரியமாதி யமையுமுன்போலுநீரில். ... ... ...*

இ-ள். தோற்றமானநுரை அலேயிலடங்கும்போது மேற்கூறிய பெருக்கமுதலிய அன்னுரையிற்சேர்ந்த குணங்கள் எழுகின்ற அலேயினிடத்தும் வீசுகின்ற காற்றடங்க அந்த அலேயும் சலத்திலடங்கினபோது, சிறந்த மாதுர்யமுதலியகுணங்கள், சலத்தில் முன்போல சுபாவமாயிருக்கும்.—எ-று. (தா-ம்) வெளிப்படை.

அ-கை. இதுவுமது.

இத்திறம்பிராதிபாசிய சீவன்ருனிலயமாம்போதில் ... ... *
மத்தியவியாவகாரி வசத்தினின்றிடுமவன்ருன் ... ... ... *
சுத்தமெஞ்ஞானந்தோன்றத் தொடருமஞ்ஞானநீங்கில் ... *
சத்தியமெஞ்ஞானனந்தஞ் சாக்ஷியினென்றுமென்றும் ... ... *

இ-ள். இந்தப்பிரகாரம் பிராதிபாசியசிவன் ஒடுங்கியபோது; இடையிலுள்ள வியாவகாரிக சீவனிடத்திருக்கும், அந்தவியாவகாரிகனும் சுத்தாத்மபோதமுண்டாய் தொடர்பாய்வந்த அஞ்ஞானமொழிந்தால், சச்சிதானந்தம், பிரத்தியகாத்மாவினிடத்தில் எப்போதும் விளங்கிக்கொண்டிருக்கும்.—எ-று.(தா-ம்.) பிராதிபாசிக. லயமாவது நித்திரையொழிந்து விழித்துக்கொள்ளல் அப்போதவனே வியாவகாரிகனுகிருன். அவனிடத்தில் சச்சிதானந்தாதி தருமங்களிருக்கின்றன. அவ்வியாவகாரிகனும் பிரமஞானேதயமாய் அஞ்ஞானமொழிந்தபோது அதன்காரியங்களான அகங்காரமுதலானவையொழிந்து லயித்தபோது சச்சிதானந்தாதி தருமங்கள் பிரத்தியகாத்மாவில்மாத்திரம் விளங்குகின்றன. அப்போது இரண்டாவதின்மையால் கேவலம் பிரமமாத்திரம் பிரகாசிக்கின்றது. இதுதான் சகலவேதாந்த சாஸ்திரங்களின் சித்தாந்தம். இந்தப் பிரகரணத்தை ஸ்ரீகுருமூர்த்தியினிடத்தில் நன்ருகவிசாரித்துணர்ந்து ஞானபோதம்அடைந்த சிஷியன் வந்தனவழிபாடுகள்செய்துக்கொண்டு சீவன்முக்தனுய் கிர்தகிர்த்தியனுய் பிரம்மாநந்தசொரூபனுய்விளங்குகின்ருன். (சுடு)

திர்குதிரிசியவிவேகம் - சம்பூர்ணம்.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

# தக்ஷிணாமூர்த்தியஷ்டகம்.

தோத்திரப் பிரார்த்தனை.

யானெனும்பொய்மைநீங்கயெனதுளத்திருந்துமுற்றுந் ... ... *
தானெனுமெய்மைகாணச் சற்குருவடிவாய்வந்தே ... ... ...*
ஊனமின்ஞானக்கண்களுதவுசின்மயனைமன்றுள் ... ... ... *
மோனமெய்ப்பொருளைத்தென்பால் மூர்த்தியைப்போற்றல்செய்வாம்.

(தோத்திராரம்பம்.)

உலகுதற்பணத்தினகர்நிழலொப்ப வொப்பிறன்னகத்துளவதனை
குலவுநித்திரைபோல்வெளியின்மாயையினாற் கோதறுநனவினுங்கண்டு
நிலவியபிரபோதசமயத்திற்சுவாத்ம-நிலைமையத்வைதமாய்விளங்கும்
அலகில்சீர்நிறைந்ததக்ஷிணாமூர்த்தி யருட்குருவவர்சரணடைவேன். (க)

விளைவிதைமுளைபோன்முனநிருவிகற்ப-மேவுமுச்சகத்தைமாயையினால்
தளைதருகாலதேசபேதங்கள்-சாரமாயாவியோகியர்போல்
வளைதரவிவிதசித்ரமாச்சுவேச்சா-மாத்திரம்விளக்குவாரெங்கும்
ஒளிதரநிறைந்ததக்ஷிணாமூர்த்தி-யுயர்குருவவர்சரணடைவேன். (உ)

எவர்சத்ரூபப்ப்ரபையசத்ரூப-மெனுஞ்சகபதார்த்தத்திற்றோன்றும்
எவர்தற்சார்ந்தோர்பெறத்தத்வமசியி-னியலுணர்தரத்தருந்தானே
எவர்சாக்ஷாத்காரத்தினான்மறித்து-மிடர்பவாம்புதிசெல்லிலையோ
எவரும்போற்றுந்தக்ஷிணாமூர்த்தி-யியற்குருவவர்சரணடைவேன். (ங)

பகுறுளைக்கட்த்துளேற்றியதீபம்-படரொளிபோலத்தன்ஞானம்
மிகுசட்சுராதியிந்திரியவழியில்-வெளிப்படவிளங்குறுமறிவான்
தகுமுயர்ஞானவிஷயமதாவார்-தனைக்கொடிவ்வகிலமுற்றிலகுந்
தொகுமுலகேத்துந்தக்ஷிணாமூர்த்தி-சுககுருவவர்சரணடைவேன். (ச)

மெய்யுணர்வின்றிச்சரீரநற்பிராணன்-வியன்பொறிமனந்திகழ்புந்தி
பொய்யுறுசூன்யமகமெனக்கண்டு-போதமின்மாதர்பாலர்களும்
தைவருகுருடர்மூகர்போற்பிராந்தர்-சத்யமாய்வாதிப்பர்மோக
மையலையகற்றுந்தக்ஷிணாமூர்த்தி-வண்குருவவர்சரணடைவேன். (ரு)

இராகுவான்மறைந்ததிவாகரன்மதியுள்-ளிலங்கல்போன்மாயையாற்சுழுத்தி
விராவுறுகாணமோய்ந்துசன்மாத்திர- மிளிர்புமான்பிரபோதமாஞ்சமயம்
புரானந்தமாகத்துயின்றனனென்னப் - பன்னுமேகாத்மஞானத்தார்
தராதலம்போற்றுந்தக்ஷிணாமூர்த்தி-சற்குருவவர்சரணடைவேன். (சு)

அகமெனும்பொருளொன்றெனச்சதாகால - மநுவர்த்தித்திளமைகௌமாரம்
சுகயவ்வனுதிசாக்ரசொப்பனமுஞ்-சுழுத்தியாதியவவத்தைகளும்
வெகுமுறைமாறிவரினுநானெனுமெய் - விளங்குசின்முத்ரையாலன்பர்
தகைபெறவுணர்த்துந்தக்ஷிணாமூர்த்தி-தயாகுருவவர்சரணடைவேன். ()

மாயையின்மயமாப்புருடனுஞ்சீவ-வடிவமாய்ச்சாக்ரசொப்பனத்தில்
ஏய்தருமகிலவுலகினைக்கார்ய-மியைதருகாரணந்தலைவன்
வாய்தருமடிமைசீடன்மற்றுசான்-மகன்றந்தையெனப்பலகாண்பார்
ஆபமெய்புருவாந்தக்ஷிணாமூர்த்தி-யருட்குருவவர்சரணடைவேன், (அ)

மண்புனலனல்கால்வெளியொடுகதிரோன் - மதிபுருடன்றனேடெட்டுங்
கண்ணெனுமியாவரட்டமூர்த்தமதாக்-காண்வரவிளங்குமெய்யறிஞர்
எண்ணுறுப்பரமும்விபுவுந்தானன்றி-யெங்கும்வேறறிதரத்தோன்று
அண்ணல்தண்ணளியார்தக்ஷிணாமூர்த்தி-யருட்குருவவர்சரண்சரணே.

(இத்தோத்திர பலசித்தி.)

இத்தகமையதாஞ்சுத்ததோத்திரத்தி-லிலகுசர்வாத்மகமான
நித்தியதத்வசொரூபநன்றாக-நியதிசெய்துணர்த்தியவதனல்
உத்தமரிதனைவினவுதல்பொருளை - யுளங்கொளல்தியானித்தல்கானம்
பத்தியாற்செயினுஞ்சர்வாத்மபூதி-பரசிவமயஞ்சித்திபெறுவார். (கo)

அருளிறைவணக்கம்.

முந்துசம்சாரவாலத்தான்மயங்கி-மோகங்கொள்சீவர்கள்பிழைக்க
வந்தவெவ்விடந்தீர்வயித்தியனென்ன-மகாத்மாநுபோதத்தைவழங்கும்
அந்தமில்பேரானந்தமாமூர்த்தி-யருட்குருசரணாரவிந்தம்
வந்தனைபுரிந்தேன்மனப்பிணியகன்றேன்-வருத்துறுபிறப்பினிவாரா.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

## சுகாஷ்டகம்.

பேதமோடபேதஞானமுமகன்று-பிரிதரப்புண்ணியம்பாபம்
தீதுறுமாயாமோகமங்கொழிந்து-திரிபையவிருத்திகடீர்ந்து
ஓதுதற்கரியதத்துவபோத-முற்றுமுக்குணங்களுமிரிந்து
போதுமங்நெறியிற்சரிப்பவர்தமக்குப்-புகன்றிடும்விதிவிலக்கியாதே.(க)

பொற்பலபணிகளனலுறச்சேர்ந்து-பொன்னென்றும்பானமும்பாலில்
நற்புனல்புனலிலொன்றுதல்போல-நவின்றிடுதொம்பதஞ்சுத்த
தற்பதார்த்தத்தில்அயிக்கியமாகுஞ்-சத்தியமோர்ந்துமுக்குணங்கள்
பற்றிலங்நெறியிற்சரிப்பவர்தமக்குப்-பகர்ந்திடும்விதிவிலக்கியாதே. (உ)

பற்பலவாபநதித்திரள்சென்று-பரவையிற்சமரசமாம்போல்
உற்பவமானசீவகோடிகடா-மொன்றியேசிற்சொரூபத்தை
தற்பரசச்சிதானந்தவடிவாஞ்-சார்தருமாயைமுக்குணங்கள்
அற்றவந்நெறியிற்சரிப்பவர்தமக்கிங்-கறைந்திடும்விதிவிலக்கியாதே. (ரு)

இலகுமிப்புரணசிற்பரான்மாவி-லியானெனல்நீயெனலியாதே
உலகமாந்திரிசியபேதமேதென்றிங்-குற்றந்தரங்கத்திலுணர்ந்தே
அலகறுவான்போற்சமரசசுவாத்ம-வானந்தநிறைந்துமுக்குணங்கள்
விலகுமந்நெறியிற்சரிப்பவர்தமக்கு-மேவரும்விதிவிலக்கியாதே. (சு)

சீவனின்முத்தித்திதியுறுமான்மா-செயல்செயலிலாமையொன்றில்லை
ஆவதாற்கர்த்தத்துவமிலையதனு-லன்யமாந்திரிசியதேக
பாவனையில்லைவெந்துறுபடம்போற்-பயின்றிடும்பிராப்தமுக்குணங்கள்
ஓவுமந்நெறியிற்சரிப்பவர்தமக்கிங்-குறைத்திடும்விதிவிலக்கியாதே. (௬)

தோன்றுமிப்பிரபஞ்சமேகசொப்பிரகாச-சொரூபமாமமிர்தமாம்பரமென்
றூன்றமெய்விழியானோக்கியேயான்மா-வமலநிற்சலசிதானந்த
பூன்றநீள்சகதாகாரமாஞ்சாட்சி-பொருந்துருவிசேட்முக்குணங்கள்
ஏன்றிலன்நெறியிற்சரிப்பவர்தமக்கிங்-கிசைத்திடும்விதிவிலக்கியாதே.()

தன்னதான்மாவைக்கடகலசாதி-தமினிறையேகவானம்போல்
மன்னுபல்சரீரத்துட்புறனெங்கும்-வயங்குபூரணமெனக்கண்டு
பன்னுகாரணகாரியபின்னபேத-பாவனைவிடுத்துமுக்குணங்கள்
அன்யவந்நெறியிற்சரிப்பவர்தமக்கிங்-கறைந்திடும்விதிவிலக்கியாதே.(எ)

பிருதிவியப்புதேயுகால்வானம்-பிறங்குறுசீவபாவமதா
மருவியவகிலவிஸ்வரூபந்தான்-வாரிதிதனிற்சயிந்தவம்போல்
வருமுறையாகச்சிற்பரான்மாவின்-மருவியொன்றுகுமுக்குணங்கள்
ஒருவுமந்நெறியிற்சரிப்பவர்தமக்கிங்-குறைத்திடும்விதிவிலக்கியாதே.(அ)

(இவ்வநுசந்தானபலம்.)

சத்யஞ்சத்யம்பரமசுகன்-தருங்கல்யாணசுபவேது
மித்தைமாயையவித்தைவன-வெந்தீசாந்திநிர்வாண
நித்யதீபநிகமநிகர்-வியாசபுத்ரநிமலநெறி
பத்தியாகவிருபோதும்-படித்திவ்வுண்மையுணர்வோர்க்கே.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# சோபானபஞ்சகமென்னுஞ் சிவோகபஞ்சகம்.

---

தேகநானல்லன்கன்மங் திகழ்ஞானேந்தியமுமல்லன்
தாகமார்கரணுங்காரஞ் சார்புந்திபிராணனல்லன்
மோகமாமனைவிமக்கள் மொய்பொருட்டொடர்பிலாத
ஏகமாஞ்சாக்ஷிநித்தியம் பிரத்பகான்மாசிவோகம். (க)

பழுதையென்றுணராமையாற் பாம்புதோற்றுதல்போல்
அழுதாற்றெனையறிந்திலா மையிற்சீவனுனேன்
பழுதிலாப்தன்சொல்பாம்பினைப் பழுதையாக்குதல்போல்
தொழுததேசிகன்மொழியினுற் சுகந்தருஞ்சிவோகம். (உ)

துயில்செய்மோகத்தினுலே சொப்பனந்தோன்றல்போல
பயிலவித்தையினுற்சுத்த பரனுனுத்மாவிலிந்த
மயல்செயுஞ்சகமாங்காட்சி மருவுஞ்சத்தியமுமல்ல
இயல்சுத்தநித்தபூர்ண விரண்டிலாப்பொருள்சிவோகம். (ங)

நான்பிறந்தவனுமல்ல னனிவளர்ந்திறந்தேனல்லன்
ஊன்படுமுடற்கேசன்ம முற்றிடும்பிரகிர்திபாவம்
வான்படுமெனக்கில்கர்த்தத் வாதியதருமம்பொய்யாம்
நானெனுமகந்தைக்கேயாம் ஞானவான்மாசிவோகம். (ச)

என்னின்வேருகத்திரிசியமொன்று மிச்சகத்திலைமாயையினுல்
துன்னுகற்பனையாத்தோன்றியபொருள்கள் சூழ்ந்ததற்பணநிழல்போல
மன்னுமத்வைதமானவென்னிடத்தில் வயங்குறத்தோன்றுதலாலே
தன்னதாம்பதத்திலருட்குருவாகிச் சார்வித்ததேகமாஞ்சிவோகம். (ரு)

திருச்சிற்றம்பலம்.

---

## சி வ ஸ் து தி.

---

சாம்பசிவனெமதுகுலதெய்வதம்பசுபதி-தமதடியார்யாங்கள்கண்டீர்
சாம்பசிவனைத்துதிக்கின்றேஞ்சுராசுரர்-தாழ்நரகாதியுயிர்கள்
சாம்பசிவனுலளித்திடநின்றயாஞ்செயுஞ்-சரணவர்பொருட்டாகவே
சாம்பசிவனன்றியொருதெய்வம்வேண்டோம்பரமர்-தாட்பணிவமன்பவர்க்கே.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

—*—

# மநீஷாபஞ்சகம்.

## பரமேஸ்வரருக்கும், சங்கராசாரியருக்கும் நடந்த சம்வாதம்.

நித்தியமாகச்சங்கராசாரி நிகழ்த்தும்யாத்திரையினிற்காசி
உத்தமப்பதியிற்சரிக்குநாளீச னுண்மையைச்சோதிக்கநீச
வித்தகவேடங்கொண்டவனேக மேவுமச்சங்கரமுனிவன்
அத்திறத்தவனைமார்க்கத்திற்கண்டு தனைந்தனரகமிகக்கூசி. (க)

சங்கராசாரியர் வினா.

யாவனிம்மார்க்கத் தடைந்தநீயென்றுன்
தேவவிப்பிரயான் றிகழ்ந்தசண்டாளன்
போவதிதூரம் போகெனவன்னுன்
ஆவெனவியந்தீ தறைந்திடலானுன். (உ)

பரமேஸ்வரர் விடை.

அன்னமயத்திலிருந் தன்னமயத்தினையோ
மன்னியசேதனமெய் மருவுசைதன்யனையோ
சொன்னதுமேதெதிநீர் தூரவகன்றிடவே
நின்நினைவேதுரையா யென்றுநிகழ்த்தியினும். (ங)

அலைதீர்சகசானந்தபயோ-நிதியாம்பிரத்தியகாத்மாவில்
நிலையிலிவன்விப்பிரநீச-னென்னும்பேதஞானமெவன்
தலையாங்கங்காசலத்தினுஞ்சண்-டாளர்விதிப்புனலிடையும்
கலையார்கதிரும்பொன்மிருத்துக்-கடாகாயம்போற்பேதமெவன். (ச)

சங்கராசாரியர் வணங்கித் துதிசெய்தல்.

ஆவருஞ்சாக்ரசொப்பனசுழுத்தி-யவத்தையிற்பிரகாசசேதனமே
பூவருமயன்முற்பிபீலிகாந்தத்தும்-பூரணசாக்ஷிமெய்ப்பொருள்யான்
ஓவருங்காக்ஷிபலனெனுமுள்ளத்-துறுதிஞானத்தினன்யாவன்
மேவுசண்டாளன்விப்பிரனேனும்-மெய்சற்குருவெனவுணர்வேன். (ரு)

அகிலமாத்தோன்றுந்திரிசியமனைத்து-மழிவதென்றருட்குருவாக்கால்
அகமுறத்தெளிந்துபிரமமேநித்ய-மந்தரமில்லதென்றமைந்த
மிகுவிவேகத்தோன்சஞ்சிதாகாம்யம்-வேவஞானக்கியாலெரித்து
தகுபிராரப்தம்புசித்திடத்தேகந்-தரிப்பவன்குருவெனவுணர்வேன். (சு)

பிரமானிந்தச்சகமெலாஞ்சித்தின்-பிறங்கும்விஸ்தாரமுக்குணங்கள்
விரவவித்தையினலசத்தியமாக-விதித்துளகற்பிதமென்றே
திரமதிபெற்றுநித்தியநிமல-சிற்பரபதமடைந்தவனே
தரமில்சண்டாளன்விப்பிரனேனுந் - தாழ்வில்சற்குருவெனவுணர்வேன்.

ஏதுசைதன்னியப்பிரபைதிரியக்கோ-டிலகியநரதேவருள்ளத்
தோதுநானென்னவியக்தமாய்நின்றிங்-குளவசேதனங்ளாமனது
போதுமிந்தியமிவ்வுடன்முதலான-பொருளின்மேகத்கதினுன்மறைந்த
ஆதவனதனைவிளக்கல்போற்பாவித்-தமைந்தவன்குருவெனவுணர்வேன்

எப்பொருட்பேரானந்தவாரிதியி-னிலேசலேசத்திலிந்திராதி
முப்புவிபாலர்சுகமடைகின்றூர்-முன்னுபசாந்தமாமனத்தில்
ஒப்பறும்யோகியின்புறுமெய்மை-யுணர்விலிபெற்றுமேயுணரா
அப்பொருளுணர்ந்தோனடிமலர்க்கமர-ரடிமைசெய்குருவெனவுணர்வேன்

திருச்சிற்றம்பலம்.

## மோக்ஷசாதகமானசாதனபஞ்சகம்.

வேதமோதுக நாடோறும் விளம்புசத் கர்மஞ்செய்க
ஆதியாம் பரமன்பூசை யாற்றுக காமம்புந்தி
சாதகமாகநீக்க சம்சாரதோடநோக்க
பாதகம்விடுக்சுவேச்சை பற்றிருபற்றுந்தீர்க. (க)

சாதுசங்கத்தைச்சேர்க தகுதெய்வபக்திசெய்க
கோதினற்சாந்தமாதி குணம்பெறக் கன்மந்தீர்க
திதிலாக்குரவற்சார்க திருவடிச்சேவைசெய்க
ஆதியாம்பரமமந்திர மருமறைவாக்கியங்கேட்க. (உ)

வாக்கியவிசாரஞ்செய்கமறைநெறியநுசந்திக்க
ஆக்கமில்தர்கநீக்க வாதிநூலுண்மைதேர்க
ஊக்கமெய்ப்பிரமம்யாமென் றுன்னுகசெயிக்குநாளும்
நீக்கவித்தேகநானன் றெனநினைபெரியோர்க்கஞ்ச. (ஙு)

அற்பமனநோய்க்குமருந் தளிக்கநாடொறும்பிட்சை
பெற்றவெளடதம்புசிக்கப் பெரிதுசத்வவுணவருந்த
உற்றதுகொண்டுளமகிழ வுறுகுளிர்வெப்பஞ்சகிக்க
சொற்றிடல்வீண்மொழியாதுந் தொடர்பகல்மன்னுயிர்க்கிரங்க. (ச)

ஏகாந்தவிடஞ்சுகிக்க வீறில்சிவமனஞ்சார்க
வாகாத்மதரிசனஞ்செய் மலர்ந்தசகமதன்விளக்கம்
ஆகாம்பங்கடிந்துமுன மானசஞ்சிதம்போக்க
போகாதபிராரப்தம் புசிபரமெய்ப்பொருளாவாய். (ரு)

இச்சாதனபலசித்தி.

எப்புருடநாடோறுந் திரமாயிக்கவிபைந்தும்
மெய்ப்படுமன்பாற்படித்து மேபவிதன்பொருட்சிந்தை
செப்பமொடுபுரியுமவன் றிகழாத்மகருணையினுற்
கைப்புறுசம்சாரவனக் கடுந்தீபோய்ச்சாந்திபெறும். (சூ)

—*—

## அம்பலவாணர்தோத்திரபஞ்சகம்.

கலித்துறை.

பொன்னூர்சடையெம் பெருமான்றிருவடி போற்றிசெயப்
பன்னடவமுன் னியற்றிலனேனும் பரிந்தடியேற்
கென்னுளநின்னம் பலக்கூத்துவந்தரு ளேறுகைக்கும்
மன்னுமலைமகள் பங்காமகேச மறைப்பொருளே. (க)

பொருளாய்நிறைந்திவ் வகிலம்பலவுயிர் பூத்தருள்செய்
யருளாய்நிகழ்ந்தம் பலத்தாடுமீச வலர்பொதுளும்
இருளார்தருபொழிற் றில்லையுள்ளாயென் னிருவினைதீர்
தெருளாய்நிலவு மொளிமணியேயருட் டேசிகனே. (உ)

தேசிகச்சிற்றம் பலத்தாடிறைவ தினமடியார்
மாசிகச்சார்ந்து மலர்க்கழல்போற்ற மகிழ்ந்தவர்பா
நேசிகச்சார்முலை யெந்தாய்க்கினிய நிருமலனே
ஏசிகச்சார்வினை தீரவருள்புரி யெம்பரனே. (ங)

பரம்பொருளாகிப் பகிரண்டகோடி படைத்தளித்து
நிரந்தரமாக விளங்குமொளியை நிகரில்தில்லைப்
புரந்தனின்மேவு பொன்னம்பலவாணனைப் போற்றியன்பால்
வரந்தரப்பெற்றனன் முத்தியும்பெற்று மகிழ்தரவே. (ச)

மகிழ்ந்தன்பரோத்தச் சிதம்பரமார்கி வயங்கொளியைத்
திகழ்ந்துலகாகிச் சராசரம்யாவுஞ் சிறந்தவொன்றை
புகழ்ந்தருள்போற்றித் தரிசிக்கப்பெற்றனன் பொற்பொதுவில்
நிகழ்திருவெவ்வினை தீர்ந்தேன்சுகோததி நேர்தரவே. (ரு)

திருச்சிற்றம்பலம்.

## சிதம்பரஸ்தோத்திரம்.

விநாயகர் துதி.

வெண்பா.

கற்பகவி நாயகரோ கண்டடியேன் சேவிக்க
சிற்பரசி தம்பரத்தைச் சேரவருள்—அற்புதனே
முந்துபல சென்மத்து முப்போது மெப்போதும்
வந்துளம்வாழ் மாதங்க மே.



பரமேசர் துதி.

கங்கைபொங்கு திங்கட்ங்கு காமருஞ் சடைப்பிரான்
மங்கைபங்க நும்பதங்க டங்கவுளம்—இங்கருள்வாய்
தில்லைநகர் மன்னிவதி செல்வமொடு கல்வியுற
ஒல்லைதர வல்லபர னே.

சிதம்பரேசர் துதி.

சிதம்பர தேவாநினது திவ்யதிருச் சேவை
இதம்பெறத்தந் தாளுவது மென்னாள்—முதம்பெறவே
வந்தெனுள மன்னியொளிர் வண்மைதிரு மூலருமை
சிந்தனைசெய் தன்புசெய வே.

அம்பலவாணர் துதி.

அம்பலவா ணசேவை யாதரித்துத் தில்லைநகர்
இன்பரவசித் தன்புசெய விச்சிதம்தேன்—நம்ப

வரவழைத்து னருளளித்து மனவுருக்க மிகவளித்து
தருகநித்ய பதநிலையைத் தான்.

சிவகாமியம்மன் துதி.

அம்பாள் சிவகாமி யம்புயத்தாள் போற்றியே
உம்பர்தொழுந் தில்லைநக ருற்றிருக்க—இம்பர்
தருவா யருவாய் சதுமறைநின் றன்பர்க்
குருவாய் வருவா யுளம்.

திருச்சிற்றம்பலத் துதி.

திருத்திகழ்சிற் றம்பலத்தை சிற்பரனையைப் போற்றி
அருத்திபெற நாடினே னன்பன்—திருச்சித்தந்
தந்தெனை வந்துனை வந்தனை முந்துற
ஏந்தனை யெந்தனை யாள்.

தக்ஷிணாமூர்த்தி துதி.

கல்லாலின் கீழிருந்து நால்சன காதியர்க்குச்
சொல்லாமற் சொன்னபரஞ் சோதியே—தில்லைநகர்
வாழுமுத லேழுலகு மன்னுமறை யின்னமுறை
குழுமுதல் தொழும்பொருளோ [illegible]

முருகேசர் துதி.

கந்தா முருகா கதிர்வேலா கார்மயிலா
எந்தாய் சிதம்பரத்தி லேயிருக்க—வந்தருள்வாய்
ஆதிமறை நான்மறை வாதவொரு ஞானவொளி
போதிலய [illegible]

கோவிந்தராஜர் துதி.

கோவிந்த ராஜா குணாயுதிரு வம்பலத்தில்
மாவிந்தை வாழு மணிமார்பா—தாவந்து
மல்குவள நல்குவயல் செல்லளவு செல்லுபொழில்
தில்லைநக ரெல்லைவதி ய.

இலட்சுமி துதி.

அம்போ ருகத்திலுறை யம்பா வடியன்மனச்
செம்போ தகத்துறையுஞ் செல்வியே—இன்பர்
மதுவளர் புதுமலர் நிறைதட முதுபதி
பொதுவரு நிதியருள் பொன்.

சரஸ்வதி துதி.

தண்டா மரைக்கிழவன் றன்னுவில் வீற்றிருக்கும்
வெண்டா மரைத்திருவே மெல்லியலே—கண்டார்
வியக்கு மொழிப்பனு வற்சொலி மன்ற
நயப்புகழ் போற்ற நவில்.

சிதம்பரவாசத்தை வியந்துகூறியது.

தொண்டர் துதிக்கடலுஞ் சூழுமறை யோதொலியும்
அண்டர்குழு வேத்துகின்ற வார்கலியும்—கண்டு
மனமகிழ்ந்து மிகவியந்து துதிபுகன்று வதிவதென்று
அனகமன்று ணடனசின்ம யா.

திருச்சிற்றம்பலம்.

—*—

சம்பூர்ணம்.